சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு

## பதினெண் கீழ்க்கணக்கு

கண்ணன் சேந்தனார்

இயற்றிய

# திணைமொழி ஐம்பது

## மூலமும், பழைய உரையும்.





Published by
The South India Saiva Siddhanta
Works Publishing Society, Tinnevelly, Ltd
October, 19[illegible]9

 [Price, As. 5

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு—ம.

## பதினெண் கீழ்க்கணக்கு

கண்ணன் சேந்தனார்

இயற்றிய

# திணைமொழி ஐம்பது

மூலமும்

[பழைய உரையும்]



சென்னை, பச்சையப்பன் காலேஜ்

தமிழாசிரியர்

மணி. திருநாவுக்கரசு முதலியார் அவர்களால்

பரிசோதிக்கப்பட்டன.

திருநெல்வேலித்

தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

லிமிடெட்

பதிவு செய்தது] துந்துபி ௵ ஐப்பசி ௴ [விலை அணா 5.

உ

திருச்சிற்றம்பலம்

# பாயிரம்

---

தமிழ்மொழி பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தோற்றமுற்று விளங்கும் ஓர் அருமந்த மொழியாம். தமிழர் கல்வி, வீரம், செல்வம், வாணிகம், சிற்பம், கைத்தொழில் முதலியவற்றிற் சிறந்து திகழ்ந்து வந்தனர். தமிழ் வேந்தராகிய பாண்டியர் தமது மொழியாகிய தமிழினிடத்து மிக்க ஆர்வமும் பற்றுமுடையாராய் அதனை வளர்த்தற்குப் பலவாறு முயன்று வந்ததேயன்றி, சங்கம் நிறுவி நல்லிசைப் புலவர் பலரைக் கொண்டு, தமிழை ஆராய்ந்தும் வந்தனர். அக்காலத்தில் தமிழ்மொழியில் அளவிறந்த நூல்கள் எழுந்தன.

இவ்வாறு தமிழ் மன்னர்களால் மும்முறை சங்கங்கள் நிறுவப்பட்டுத் தமிழ் ஆராயப்பட்டது. மும்முறை நடைபெற்று வந்தமையான் சங்கம் முச்சங்கம் எனப் படுவதாயிற்று.

தமிழர் தவக்குறைவானே தலைச்சங்கத்துத் தோன்றிய நூல்களுள் ஒரு சிலவே பெயர் மாத்திரையிற் கேட்கப்படுகின்றன. இடைச்சங்கத்து நூல்களுள் இன்றுவரை முழுநூலாக மிளிர்வது தொல்காப்பியம் ஒன்றே. கடைச்சங்கத்து நூல்களுள் இறந்தன போக, எஞ்சிநின்றவற்றைப் பிற்காலத்துச் சான்றோர் அளவு, யாப்பு முதலிய காரணம் பற்றி மேற்கணக்கு, கீழ்க்கணக்கென இருவகைப் படுத்தினர். மேற்கணக்கில் பத்துப்பாட்டு எட்டுத்தொகை எனத்

தொகுக்கப்பட்ட இரண்டு தொகை நூல்களும் அடங்கும். கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டாம். அவை பதினெட்டே என்பதும் அவற்றின் பொது வியல்பு இன்னதென்பதும் தொல்காப்பியச் செய்யுளியலில் உகூ ஆம் சூத்திரத்திற்குப் பேராசிரியர் பின்வருமாறு எழுதிய உரையான் தெள்ளிதின் அறியப்படும் என்க.

'தாயபனுவலோ' டென்றது அறம் பொருள் இன்பமென்னும் மூன்றற்கும் இலக்கணஞ் சொல்லுப, வேறிடையிடை அவையன்றியுந் தாய்ச் செல்வ தென்றவாறு. அஃதாவது பதினெண் கீழ்க்கணக்கென உணர்க. அதனுள் இரண்டடியானும் ஐந்தடியானும் ஒரோ செய்யுள் வந்தவாறும் அவை சிலவாய மெல்லிய சொற்களான் வந்தவாறும் அறம் பொருள் இன்பமென அவற்றுக்கு இலக்கணங் கூறிய பாட்டுப் பயின்றுவருமாறுங் கார்நாற்பது, களவழி நாற்பது முதலாயின வந்தவாறுங் கண்டுகொள்க.'

இனி, பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் இன்னின்ன என்பதைப் பின்வரும் பழஞ் செய்யுள் இனிது புலப்படுத்துமாறு காண்க.

'நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி—மாமூல
மெய்ந்நிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு'

இவ்வெண்பா பழம்பிரதிகளுள் 'கைந்நிலையோ டாங் கீழ்க்கணக்கு' 'இன்னிலைய காஞ்சியோடு' 'ஐந்தொகை முப்பால் கடுகம்' 'நன்னிலைய வாங்கீழ்க் கணக்கு' எனச் சிறிது சிறிது வேறுபட்டுக் காணப்படுதலினால், புலவர் பதினெட்டாவது நூல் இன்னதெனத் துணிதற்கண் வெவ்வேறு கருத்துடையராகின்றனர். ஒரு சாரார் கைந்

நிலையே பதினெட்டாம் நூலென்றும், மற்றொரு சாரார் ஐந்திணை என்பதற்கு ஐந்திணைப்பொருள் பற்றிவரும் ஐந்து தொகை நூலெனப் பொருள்கொண்டு, 'திணைமாலை' எனப் பழைய உரைகளிற் பயின்றுவரும் நூலே அப்பதினெட்டாவது என்றுங் கூறுவர். இனியொரு சாரார் மேலே கூறியவாறு ஐந்து திணை நூல்களையும் உடன்பட்டு, அதனோடு 'இன்னிலை' 'கைந்நிலை' என்னும் நூல்களையுங் கூட்டிக் கீழ்க்கணக்கு நூல்கள் இன்னின்னவெனக்கூறும் வெண்பாவின்கண் தொகைவரையறை காணப்படாமையின், பதினெட்டுக்குமேலும் இருபது நூல்கள் கீழ்க்கணக்கைச் சார்ந்தனவெனக் கொள்ளுதற்கண் வரக் கடவதாய இழுக்கென்னை என்பர். அது பொருந்தாமை மேலே காட்டிய பேராசிரியர் உரையான் இனிது உணரப்படும். அதனுள் அவர் பதினெண் கீழ்க்கணக்கெனத் தெளிவுறக் கூறியிருத்தல் காண்க.

திணைமொழி ஐம்பது என்னும் இந்நூல் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. சாத்தந்தையார் மகனார் கண்ணன் சேந்தனார் என்னும் நல்லிசைப் புலவரால் இயற்றப்பட்டது. இவ்வாசிரியரைக் குறித்து யாதும் தெரிந்திலது. இந்நூற் செய்யுட்களிற் பல, தொல்காப்பிய உரையின்கண் பலவிடத்தும் எடுத்தாளப்பட்டுள்ளன. இஃது ஒவ்வோர் திணைக்கும் பப்பத்துச் செய்யுளாக ஐந்திணையுங் குறித்துக் கூறும் ஐம்பது பாட்டுக்களையுடையது. இதிலுள்ள பாக்கள் எதுகை, மோனை முதலியவற்றைப் பெரும்பான்மையும் பெற்றும், தெள்ளிய இன்னோசை வாய்ந்தும், பொருள் புலப்பாடு சிறந்தும் தோன்றுதலின் கடைச்சங்கத் திறுதியின்கண் இவ்வாசிரியர் இதனை இயற்றினாரென ஊகிக்கப்படும். கடைச்சங்க காலம் இற்றைக்கு ஏறக்குறைய இரண்

டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் ஆதலின் இவரது காலமும் அன்னதாதல்வேண்டும். 'கணம்' 'சித்திரம்' 'வித்தகம்' 'குணம்' 'பவளம்' முதலிய மிகச் சில வடசொற்களே இதன்கண் பயின்றுள்ளன. அவையும் எதுகை, மோனை, வழங்கற்பாடு, ஓசையினிமை முதலிய நோக்கம் பற்றிப் பெய்துரைக்கப்பட்டன என்பது இந்நூலிலுள்ள பாடல்களைக்காண்போருக்கு வெளிறித் தோன்றும். இந்நூலகத்தே, 'கணமுகை கையெனக் காந்தள் கவின, மணமுகையென் றெண்ணி மந்தி கொண்டாடும் விறன்மலை நாட' 'பலவின் பழம்பெற்ற பைங்கட்கடுவன் எலவென் றிணைபயிருமேகல் சூழ் வெற்பன்' 'பழனம் படிந்த படுகோட் டெருமை, கழனி விளைநர்க் கெறிந்த பறைகேட், டுரனழிந்தோடு மொலிபுனலூரன்' என ஆங்காங்கு வருவனவற்றுல் உள்ளுறைப் பொருள் அவ்வவ்விடங்களில் இருத்தல் நன்குணரப்படும். சொல்லும் பொருளுந் தித்திக்க, வகுத்து எடுத்துக் கொண்ட துறைக்கேற்ப, இயற்கை நெறியைக் கடவாத பல வுவமைகளானும் தோற்றங்களானும் சித்திரிக்காது, இயற்கை அமைப்பின் சித்திரமே சித்திரமாக நன்கு புலப்படுமாறு தமது பெரும் புலமையானும் ஆழ்ந்தகன்ற நுண்ணுணர்வானுங், கண்டவற்றைக் கண்டவாறே பாடியருளிய இப்புலவாணரது செந்நாப்புலமை எக்காலத்தாரானும் எவ்விடத்தும் மகிழ்ந்து போற்றற் குரித்தென்பதிற் சிறிதும் ஐயமின்று. இத்தகைய நூல்களைக் கற்காது வாளுள் வீளுள் கழிக்கும் தமிழர் ஏழைமை பெரிதும் இரங்கற்பாலது.

இதற்குப் பழைய உரை ஒன்றுண்டு. அது பாட்டின் பொருளைப் பொழிப்பாக நன்று எடுத்துரைப்பது. பதசாரம், உள்ளுறைப் பொருள், இலக்கண விசேடம் முதலிய வேறொன்றும் அதிற் காணப்படவில்லை. இது போன்ற

உரை பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள் பலவற்றிற்கும் உளது. இவ்வுரையாசிரியர் இன்னாரெனப் புலப்படவில்லை. உரையின்கண், இப்போது எளிதில் பொருள் விளங்கலாகாத சொற்கள் அவ்வாறே பெய்துரைக்கப்பட்டுள்ளன.

இது 1918 ஆம் ஆண்டில் இலக்கண விளக்கப் பரம்பரை, ஸ்ரீ சோமசுந்தர தேசிகரால் பரிசோதித்து, திருவாரூர்த் தமிழ்ச் சங்கத்தாரால் வெளியிடப்பட்டது. இத் தமிழ்ச் செல்வர்கட்குத் தமிழகம் பெரிதும் கடமைப்பட்டதாகும்.

இவ்வச்சிட்ட பிரதியையும் எமக்குக் கிடைத்த இரண்டு பிரதிகளையும் ஒருங்கு வைத்து ஒப்பிட்டுப் பார்த்ததில், சிறந்த திருத்தங்கள் பல காணப்பட்டன. ஆதலின், அவை தமிழுலகுக்குப் பயன்படும் என்னுங் கருத்தான், இந்நூல் அப்பிரதிகளைக்கொண்டு ஒருவாறு ஆராயப்பட்டு அருஞ் சொல்லகராதியுடன் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப் பெறுவதாயிற்று.

பெரும்புலவர்களே கையிடத்தக்க இச்சிறிய பெரிய நூலைப் பரிசோதிக்கும்படி செலுத்திய திருவருளை வழுத்துகின்றேன்.

'குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.'

ஆலந்தூர்,
18-10-22.

இங்ஙனம்,
மணி. திருநாவுக்கரசன்

# பாட்டு முதற்குறிப் பகராதி


| செய்யுள் | பக்கம் |
| --- | --- |
| அஞ்சனக் காயா ... | கக |
| அணிபூங் கழிக் ... | உஉ |
| அதிர்குர ... | கச |
| அருவி யதிரக் ... | கச |
| ஆம்பலணித் ... | கசு |
| ஆய ரினம ... | கங |
| இருங்கடன் ... | கங |
| இனமீ னிருங்கழி ... | உக |
| எறிசுறா நீள் கட ... | உ0 |
| ஏற்றிய வில்லி ... | க0 |
| ஏன விடத் ... | ங |
| ஓங்க விறுவரை ... | உ |
| ஓங்கு குருந்தோ ... | எ |
| கடல் கொழித் ... | உக |
| கடையாயார் ... | ககூ |
| கணமுகை ... | உ |
| கனைக்கா ... | கரு |
| கதிர்சுடக் ... | சு |
| கருங்கயத் தாங்கட் | கஅ |
| கருங்கான் ... | அ |
| கருவியல் ... | கஉ |
| கலையொடு ... | க0 |
| கல்லதர் வாயிற் ... | சு |
| கழுநீர் மலர் ... | கூ |
| கறங்குமணி ... | உங |
| கோடலங் கூர்முகை | கச |
| சிறுபுன் புறவொடு | அ |
| செஞ்சுணங்கின் ... | கஉ |
| செந்தாமரை ... | கஎ |
| செந்நெல் விளை ... | ககூ |
| சென்றார் வருவர் ... | கஉ |
| நல்வய லூர ... | கஅ |
| நெய்தற் படப்பை ... | கசு |
| பலவின் பழும் ... | ரு |
| பல்காலும் வந்து ... | கஎ |
| பவழமு முத்தும் ... | உங |
| பழனம் படிந்த ... | கரு |
| பிணி நிறந் தீர்ந்து ... | ரு |
| புன்னை பொறி ... | எ |
| மயில்கொன் ... | உங |
| முத்த மரும்பு ... | உ0 |
| முரிபரல வாகி ... | எ |
| முருகியல் கான ... | உஉ |
| மென் முலைமே ... | கக |
| யாழுங் குழலு ... | ச |
| யானை யுழலு ... | ச |
| வானுயர் ... | க |
| விரைகமழ் ... | ங |
| வேங்கை மலர ... | ச |
| வேனிற் பருவத் ... | கஎ |

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திணைமொழி ஐம்பது

## மூலமும் உரையும்

---

### க. குறிஞ்சி

க. ..................................................

..................................................

*வானுயர்வெற்ப ! விரவின் வரல்வேண்டா

யானை யுடைய சுரம்.

அஞ்சி அச்சுறுத்துவது

இதன் பொருள்.........அண்டர் துகள் பொழிகின்ற வானளவு முயர்ந்த வெற்பனே! இரவின்கண் வரல் வேண்டா...............யானை வருகின்ற சுரங்களாதலான்; என்றவாறு. (க)

---

* நச்சினார்க்கினியர் உரையில்கண்டவை (தொல்-செய்)

௨. கணமுகை கையெனக் காந்தள் கவின
மணமுகை யென்றெண்ணி மந்திகொண் டாடும்
விறன்மலை நாட! வரவரி தாங்கொல்லோ
புனமு மடங்கின காப்பு.*

சேறிப்பறிவுறீஇ வரைவு கடாயது

இ - ள். திரட்சியையுடைய மொட்டுக்களைக் கை யென்று கருதும்படி காந்தள் அழகுபெற அரும்ப, அதன் மணத்தையுடைய முகைகளென்று கருதி, மந்திகள் கொண் டாடுகின்ற மிகுதியையுடைய மலைநாடனே! நீ இங்கு வருத லரிதாங் கொல்லோ? புனங்களுந் தினையரியப்பட்டுக் காவ லொழிந்தன; எ-று. (௨)

௩. †ஓங்க லிறுவரைமேற் காந்தள் கடிகவினப்
பாம்பென வோடி யுருமிடிப்பக் கண்டிரங்கும்
பூங்குன்ற நாடன் புணர்ந்தவந் நாட்போல
‡ஈங்கு நெகிழ்ந்த வளை.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச்
சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது

இ - ள். மலையினது பக்கமலைமேற் காந்தள் புதிதாக அழகு பெறுதலால், அவற்றின் முகைகளைப் பாம்பென்று

---

* நச்சினார்க்கினியர். (தொல்—களவியல், மேற்கோள். சூ. ௧௧௪)

† இதனை, நச்சினார்க்கினியர் இரவுக்குறி நயந்து கூறியது என்பதற்கு உதாரணங் காட்டுவர். (தொல்—களவியல், சூ. ௧௧௧)

‡ நீங்கி - நச்சினார்க்கினியர் கொண்ட பாடம். (தொல் - களவியல் மேற்கோள்.)

கருதிச் சென்று உருமு இடித்தலான், அவற்றைப் பிறர் கண்டிரங்குகின்ற பூங்குன்ற நாடன் புணர்ந்த அந்நாள்போலவாய் இக்காலத்து நெகிழ்ந்து கழன்ற வெள்வளைகள்; எ-று.

௪. *ஏன லிடத்திட்ட வீர்மணிகொண் டெல்லிடைக்
கானவர் மக்கள் கனலெனக் கைகாய்த்தும்
வானுயர் வெற்பன் வருவான்கொ லென்றோழி
மேனி பசப்புக் கெட. †

தலைமகனைத் தோழி இரவுக் குறி நயப்பித்தது

இ-ள். ஏனலிடத்திட்ட குளிர்ந்த மணிகளைக் கொண்டு இரவின்கட் குறவர் மக்கள் தங்குளிர் நீங்கக் காயும்.........வெற்பன் ஈங்கு வருவான் கொல்லோ? என்னுடைய தோழி மேனியிற் பசப்புக் கெட; எ-று. (௪)

௫. விரைகமழ் சாரல் விளைபுனங் காப்பார்
வரையிடை வாரன்மின் ஐய!—உரைகடியர்
வில்லினர் வேலர் விரைந்துசெல் லம்பினர்
கல்லிடை வாழ்ந ரெமர்.

பின்னின்ற தலைமகனைக் காவன்மிகுதி சொல்லிச் சேட்படுத்தது

இ-ள். விரை கமழாநின்ற சாரலின்கண் விளைபுனங் காப்பார்கள், இம்மலையின்கண் வரவேண்டா ஐயனே! கடுஞ்சொல்லினர், வில்லினர், வேலர், விரைந்து செல்லுமம்பினர் மலையின்கண் வாழ்வாராகிய வெமர்; எ-று. (௫)

---

* 'ஏனமிடந்திட்ட' வெனவும் பாடம்; அதற்குப் பன்றியால் தோண்டப்பட்ட எனப்பொருள் கொள்க.

† இதனை, தலைவன் வருவானென்றதற்கு உதாரணங் காட்டுவர் நச்சினார்க்கினியர் (தொல்—களவியல், சூ. ௧௧௪)

௬. யானை யுழலு மணிகிளர் நீள்வரைக்
கானக வாழ்க்கைக் குறவர் மகளிரேம
ஏனலுள் ஐய! வரவுமற் றென்னைகொல்?
காணினுங் காய்வ ரெமர். *

இதுவுமது

இ-ள். யானைகள் உழன்று திரியும் அழகு மிக்க நீள் வரைக் கானகத்து வாழும் வாழ்க்கையினையுடைய குறவர் மகளிரேம் யாங்கள்; ஏனலின் கண் நீரே வருதல் என்ன பயனுளது? ஐய! நம்மைக் காணினும் நீர் வந்தீரென்று கேட்பினும் நம்மை வெகுள்வர் எமர்; எ-று. (௬)

௭. யாழுங் குழலு முழவு மியைந்தென
வீழு மருவி விறன்மலை நன்னாட!
மாழைமா னோக்கியு மாற்றா ளிரவரின்
ஊரறி கௌவை தரும்.

இரவுக்குறி விலக்கி வரைவு கடாயது

இ-ள். யாழுங் குழலு முழவுந் தம்முள் பொருந்தி யொலித்தாற்போல வீழாநின்ற அருவியையுடைய மிக்க மலை நாடனே! மதர்ப்பினையுடைய மான்போன்ற நோக்கினை யுடையாளும் ஆற்றமாட்டாள். நீர் இரவின்கண் வருதிராயின் ஊரும் பிறரும் அறியும் அலரைத் தரும்; எ-று. (௭)

௮. வேங்கை மலர வெறிகமழ் தண்சிலம்பின்
வாங்கமை மென்றோட் குறவர் மகளிரேஞ்
சோர்ந்து குருதி யொழுகமற் றிப்புறம்
போந்ததில் ஐய! களிறு.

* இதனை, அஞ்சி அச்சுறுத்தலின்கீழ் தமரையஞ்சிக் கூறியது என்பதற்கு உதாரணங் காட்டுவர்—நச்சினார்க்கினியர். (தொல்—களவியல், சூ. ௧௧௪)

..........................படை *

இ-ள். வேங்கை மலர்தலான் வெறி கமழாநின்ற தண் சிலம்பின்கண்ணே வளர்ந்த மூங்கில் போன்ற மெல்லிய தோளையுடைய குறவர் மகளிரேம் யாங்கள். குருதிபாய்ந் தொழுக இவ்விடத்தின்கண் போந்ததில்லை ஐயனே! களிறு; எ-று. (அ)

௯. பிணிநிறந் தீர்ந்து பெரும்பணைத்தோள் வீங்க
மணிமலை நாடன் வருவான்கொல் ? தோழி !
கணிநிறை வேங்கை மலர்ந்துவண் டார்க்கும்
மணிநிற மாலைப் பொழுது.†

தோழி தலைமகனை இரவுக்குறி நயப்பித்தது

இ-ள். நோயான் வந்த நிறந் தீர்ந்து, பெரும்பணைத் தோள் பெருப்ப அழகிய மலைநாடன் வருவான் கொல்லோ? தோழி ! கணியைப்போல நாட்சொல்லும் நிறைவேங்கை மலர்ந்து வண்டுகள் ஒலியாநின்ற நீலமணிபோன்ற நிறத் தினையுடைய மாலைப் பொழுதின்கண் ? எ-று. (௯)

௰. பலவின் பழம்பெற்ற பைங்கட் கடுவன்
எலவென் றிணைபயிரு மேகல்சூழ் வெற்பன்.
புலவுங்கொ ரேழி! புணர்வறிந் தன்னை
செலவுங் கடிந்தாள் புனத்து.‡

---

* இதனை, தலைவனைப்பேதமை யூட்டினது என்பதற்கு உதாரணங் காட்டுவர் நச்சினார்க்கினியர். (தொல் - களவியல், சூ. ௧௧௪)

† நச்சினார்க்கினியர் மேற்கோள். (தொல் — களவியல், சூ. ௧௧௧)

‡ இதனை, மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழி தோழிக்கு நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தல் என்பர் நச்சினார்க்கினியர். (தொல்—களவியல், சூ. ௧௧௧)

தலைமகன் சிறைப்புறத்தானாகப் படைத்துமொழி கிளவியால் தோழிவரைவு கடாயது

இ - ள். பலாப்பழத்தினைப் பெற்ற பசுங்கண்ணினை யுடைய குரங்கினுட் கடுவன், ஏடி! யென்று தனக்கிணை யாகிய மந்தியை யழைக்கும் பெற்றிய கற்கள் சூழ்ந்த வெற்பன் நம்மை யுடுங்கொல்லோ? தோழி! நங்காதலரோடு புணர்ந்த புணர்ச்சியை யறிந்து புனத்துச் செல்லும் செல வினையும் தவிர்த்தாள் அன்னை யாதலால்; எ-று. (ய)

குறிஞ்சி முற்றும்.

---

## உ. பாலை

கக. கழுநீர் மலர்க்கண்ணாய்! கௌவையோ நிற்கப்
பொருணீரார் காதலர் பொய்த்தனர் நீத்தார்
அழிநீர வாகி யரித்தெழுந்து தோன்றி
வழிநீ ரறுத்த சுரம்.*

தலைமகனது செலவுணர்ந்து வேண்டாத மனத்தாளாய்த் தலைமகள் தோழிக்குச் சொல்லியது

இ - ள். செங்கழுநீர் மலர் போன்ற கண்ணினையுடையாய்! அவர் பிரிந்ததால் நிகழும் அலர் நிற்கப் பொருண் மேல் நீர்மையை யுடையராய் நங்காதலர் முன் சொல்லிய சொல்லைப் பொய்த்து நம்மை நீங்குவார் போனார்; அங்குள்ளார் அழியும் நீர்மையவாகிப் பசையறு தனக்குத் தோன்றிப் போம் வழியின்கண் நீரறுத்த சுரங்களின் கண்ணே; எ-று. (க)

---

* நம்பி அகப்பொருள்—சூ. கஎ0. தஞ்சைவாணன் கோவை உசுச செய்யுள் நோக்குக.

கஉ. முரிபரல வாகி முரணழிந்து தோன்றி
எரிபரந்த கான மிவைபொருட்குப் போவீர்
அரிபரந்த வுண்கண்ணாள் ஆற்றுமை நும்மின்
தெரிவார்யார் தேரு மிடத்து.

யான் பிரியத் தலைமகளாற்றுமோ நீ அறிவாயாகென்ற தலைமகற்குத் தோழி சொல்லியது

இ - ள். முரிபரந்த பருக்கையினையுடையவாய் வலியழிந்து தோன்றி எரிபரந்த கானத்தின்கண் இயற்றும் பொருட் பொருட்டுச் செல்வீர். அரிபரந்த உண்கண்ணாள் ஆற்றாளென்னுந் திறத்தை நும்மைப் போலப் பிறரறிகிற்பார் யார் ஆராயுமிடத்து; எ-று. (உ)

கங. ஓங்கு குருந்தோ டரும்பீன்று பாங்கர்
மராஅ மலர்ந்தன தோன்றி விராஅய்க்
கலந்தனர் சென்றார் வலந்தசொ லெல்லாம்
பொலந்தொடீஇ பொய்த்த குயில்.

பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது

இ - ள். ஓங்கிய குருந்தோடே கூட அரும்புகளை யீன்று பாங்காகிய மராஅமரமும் விளங்கி மலர்ந்தன; புணர்ந்து விரவிக் கலந்து சென்ற நங்காதலர் வலந்த சொல்லெல்லாம் பழுதாக்கின குயில்கள் பொலந்தொடீ! எ-று. (ங)

கச. புன்னை பொறிமலரும் பூந்தண் பொழிலெல்லாஞ்
செங்கட் குயிலக வும்போழ்து கண்டும்
பொருணசை யுள்ளந் துரப்பத் துறந்தார்
வருநசை பார்க்குமென் னெஞ்சு.

இதுவுமது

இ - ள். புன்குகள் பொறிபோல மலரப் பூந்தண் பொழில்களெல்லாஞ் செங்கட் குயில்கள் கூவுகின்ற போழ்து கண்டும், முன்பு பொருணசையை யுடைய ஊக்கந் துரப்ப நம்மை நீங்கினர்; வருநசையைப் பாராநின்றது என் னெஞ்சு; எ-று. (ச)

கரு. சிறுபுன் புறவொடு சிற்றெறுழால சீறும்
செறியரு நீள்சுரத் தல்குவர்கொல் தோழீ!
முறியெழின் மேனி பசப்ப வருளொழிந்
தார் பொருள் வேட்கை யவர்.

ஆற்ருளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலென்பதுபடச் சொல்லியது

இ - ள். சிறிய புல்லிய புறவினொடு சிறிய புல்லூறு வெருளும் வழியரிய நீள்சுரத்தின்கட் டங்குவர் கொல்லோ? தோழீ! தளிரினது அழகு போன்றிருந்த என்மேனி பசப்ப, நம் மேலுள்ள அருளினை யொழிந்து நிறைந்த பொருளினை வேட்ட வேட்கையை யுடையவர்; எ-று. (ரு)

கசு. கருங்கான் மராஅ நுணவோ டலர
இருஞ்சிறை வண்டினம் பாலை முரல
அரும்பிய முள்ளெயிற் றஞ்சொன் மடவாய்!
விரும்புநாம் செல்லு மிடம்.

புணர்ந்துடன் போகிய தலைமகன் தலைமகளை ஆற்றுவித்துக் கொண்டு சொல்லியது

இ - ள். கருங்காலினையுடைய மராமரங்கள் நுணவொடு மலர, இருஞ்சிறை வண்டினங்கள் பாலையென்னும்

பண்ணை முரல, அருமபிய முள்ளெயிற்றினையும் அழகிய சொல்லினையு முடைய மடவாய்! நாம் செல்லும் வழியை விரும்புவாய்; எ-று. (சு)

கஎ. கல்லதர் வாயிற் கடுந்துடிகள் பம்பும்
வில்லுழுது வாழ்நர் குறும்புள்ளும் போவர்கொல்?
எல்வளை மென்றோள் நெகிழப் பொருணசை இ
நல்கா துறந்த நமர்.

ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலென்பது
படச் சொல்லியது

இ - ள். கல்லையுடைய வழிமருங்கினுள்ள குறும்புகளின் வாயிற்றும அச்சத்தைச் செய்யுந் துடிகள் நின்று இயம்பும் வில்லுழுது வாழ்வார் குறும்பின்கண்ணுஞ் செல்வர் கொல்லோ? இலங்கும் வளைமென்றோள் மெலியும்படி பொருள் காதலால் நம்மை நல்காது நீங்கிய நமர்; எ-று. (எ)

கஅ. கதிர்சுடக் கண்ணுடைந்து முத்தஞ் சொரியும்
வெதிர்பிணங்குஞ் சோலை வியன்கானஞ் செல்வார்க்
கெதிர்வன போலிதே யெல்வளையோ கொன்னே
யுதிர்வன போல வுள.

செலவுக் குறிப்பறிந்த தலைமகள் உடன்படாது சொல்லியது

இ - ள். வெயில் சுடுதலாற் கண்பிளந்து முத்தங்களைச் சொரியா நின்ற வேய் பிணங்குஞ் சோலையை யுடைய அகன்ற கானத்துஞ் செல்லக் கருதினார்க் குடன்படுவன போன்றிருந்தனவில்லை; என்னிலங்கு வளையோ கொன்னே நிலத்தின்கட் சிந்துவன போன்றன; எ-று. (அ)

* 'உகள்வனபோலவுள' என்றும் பாடம்.

௧௯. கலையொடு மானிரங்கு கல்லத ரத்த
நிலையஞ்சி நீள்சுரந் தல்குவர்கொல்? தோழி!
முலையொடு சோர்கின்ற பொன்வண்ண மன்னோ
வளையொடு சோருமென் றோள்.

ஆற்றுளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவல் என்பதுபடச் சொல்லியது

இ-ள். கலையொடு மான்கள் துன்புற்றிரங்கா நிற்கும் மலைவழிகளையுடைய கட்டறுகளின் இப்பெற்றிப்பட்......... நிலையஞ்சிச் சுரத்தின் கட்டடங்குவர் கொல்லோ? தோழி! கலையோடு சோர்கின்றன போன்ற வண்ணங்கள் அந்தோ! வளையுடனே தளர்ந்து சோர்கின்ற என்றோள்கள்; எ-று. (௧௯)

௨0. ஏற்றிய வில்லி னெயினர் கடுஞ்சுரம்
பாற்றினஞ் சேரப் படுநிழற் கண்டஞ்சிக்
கூற்றனை வல்வில் விடலையோ டென்மகள்
ஆற்றுங்கொ லைய நடந்து.

மகட் போக்கிய நற்றாய் சொல்லியது

இ-ள். நாணேற்றிய வில்லினையுடைய வேடர் வாழும் கடுஞ்சுரத்தின்கட் பாற்றினஞ் சேரப் படுகின்ற நிழலைக் கண்டஞ்சி, என் மகள் கூற்றன்ன வல்வில்லை யுடைய விடலை யுடனே சென்றாற்ற வல்லள் கொல்லோ மெல்லிதாக நடந்து; எ-று. (௨0)

பாலை முற்றும்.

## ரு. முல்லை

உக. அஞ்சனக் காயா மலரக் குருகிலை
ஒண்டொடி நல்லார் முறுவல் கவின்கொளத்
தண்கமழ் கோடல் துடுப்பீனக் காதலர்
வந்தார் திகழ்கநின் றோள்.

தலைமகன் வரைவு மலிந்தது தோழி தலைமகட்குச் சொல்லியது

இ - ள். அஞ்சனம் போலக் காயாக்கள் மலர, குருகிலைகள் ஒண்டொடியுடைய நல்லார் முறுவல்போல அழகு கொள்ள, குளிர்ந்த கோடல்கள் துடுப்புப்போலப் பூங் குலையை யீனுநிற்ப, நங்காதலர் வந்தார்; நின்னுடைய தோள்கள் விளங்குவனவாக; எ-று. (க)

உஉ. மென்முலைமே லூர்ந்த பசலைமற் றென்னுங்கொல் ?
நன்னுதன் மாதராய் ஈதோ நமர்வருவர்
பன்னிற முல்லை யரும்பப் பருவஞ்செய்
தின்னிறங் கொண்டதிக் கார்.

தோழி பருவங் காட்டித் தலைமகளை வற்புறுத்தியது

இ - ள். நின்னுடைய மெல்லிய முலைமேலேறிய பசலை நிறம் என்னுங் கொல்லோ! நன்னுதலையுடைய மாதராய்! நமர் ஈதோ வருவர்; பற்போன்றிருந்த நிறத்தை யுடைய முல்லைகள்தாம் முகை யரும்பப் பருவத்தைச் செய்து கண்டார்க் கினிய நிறத்தைக் கொண்டது இக் கார்; எ-று. (உ)

உ௩. சென்றார் வருவர் செறிதொடீஇ காரிஃதோ
வெஞ்சின வேந்தர் முரசி னிடித்துரறித்
தண்கடல் நீத்தம் பருகித் தலைசிறந்
தின்றையின் நாளை மிகும்.

இதுவுமது

இ - ள். நம்மைப் பிரிந்து போயினார் வருவர். செறிதொடீஇ! இக்காலம் கார்காலமா யிருந்தது. வெஞ்சின வேந்தர் முரசுபோலிடித்து முழங்கித் தண்கடல் வெள்ளத்தைப் பருகி மேன்மேற் சிறந்து இன்றையின் நாளை மிகுங் காண்; எ-று. (௩)

உ௪. செஞ்சுணங்கின் மென்முலையாய்! சேர்பசலை தீரிஃ
வஞ்சினஞ் சொல்லி வலித்தார் வருகுறியால் [தோ
வெஞ்சினம் பொங்கி யிடித்துரறிக் கார்வானந்
தண்பெயல் கான்ற புறவு.

இதுவுமது

இ - ள். செஞ்சுணங்கினையுடைய மெல்லிய முலையாய்! நின்னைச் சேர்ந்த பசலை நீங்குவதாகச் சூளுறவாகிய சொற்களைச் சொல்லி நம்மை வற்புறுத்தினார். தாம் வருதற்குச் சொல்லிய குறியால், வெஞ்சினத்தாற் பொங்கியதுபோல இடித்து முழங்கிக் கறுத்த முகில்கள் தண்பெயலைப் புறவின் கண்ணே யுகுத்தனவாதலால், காரிது; எ-று. (௪)

உ௫. கருவியல் கார்மழை கால்கலந் தேந்த
வுருகு மடமான் பிணையோ டுகளும
உருவ முலையாய்! நங் காதல ரின்னே
வருவர் வலிக்கும் பொழுது.

இதுவுமது

இ - ள். கருவியன்ற கரிய மழை காற்றொடு கலந்துயர் தலால், முன் வெம்மையால் உருகும் மடமான்கள் தம்பிணை யோடு உகளாநின்றன. நிறத்தையுடைய முலையாய்! நங்காத லர் இப்பொழுதே வருவர். இக்காலம் நம்மைத் தேற்றுவியா நின்றது; எ-று. (ரு)

உசா. இருங்கடன் மாந்திய வேர்கொ ளெழிலி
கருங்கொடி முல்லை கவின முழங்கிப்
பெரும்பெய றூழப் பெயர்குறி செய்தார்
பொருந்த நமக்குரைத்த போழ்து.

இதுவுமது

இ - ள். பெருங்கடலைப் பருகிய அழகுகொண்ட முகில், கருங்கொடி முல்லைகள் அழகு பெறும்படி முழங்கிப் பெரும் பெயல் தாழாநிற்கப் பெயர்ந்து வருவேமென்று காதலர் குறி செய்தாராகலால், நமக்குப் பொருந்த அவருரைத்த கால மிது; எ-று. (சா)

உஎ. ஆய ரினம்பெயர்த் தாமப லடைதரப்
பாய முழங்கிப் படுகடலு ணீர்முகந்து
மாயிரு ஞால மிருள்கூர் மருண்மாலை
சேயவர் செய்த குறி.

இதுவுமது

இ - ள். ஆயர்களினத்தை ஊரின்கண்ணே பெயர்வித்து ஆம்பற் குழலை மருவ, ஒலிக்குங் கடலுள் நீரை முகந்து பரக்க முழங்குதலான், மாயிரு ஞாலமெல்லாம் இருள் மிக்கு மயங் கும மாலைப்பொழுது நம்மைப் பிரிந்து சேயராயினார் வருவ தற்குச் சொல்லிய குறி; எ-று. (எ)

உஅ. அதிர்குர லேறோ டலைகடன் மாந்தி
முதிர்மணி நாக மனுங்க முழங்கிக்
கதிர்மறை மாலை கனைபெய லூழப்
பிதிரு முலைமேற் சுணங்கு.

பருவங் காட்டிய தோழி வற்புறுத்தியது

இ-ள். அலைகடலை பருகி அதிராநின்ற குரலினை யுடைய உருமேற்றோடு முதிர்ந்தமணி நாகங்கள் வருந்தும் வகை முழங்கி வெயில் மறைந்த மாலைப் பொழுது மிக்க பெயல் தாழ்தலான், இவள் முலைமேற் சுணங்குகள் பிதிர்ந் தாற்போல இனிப் பரக்கும்; எ-று. (அ)

உகூ. கோடலங் கூர்முகை கோளரா நேர்கருதக்
காடெலாங் கார்செய்து முல்லை யரும்பின
ஆறெலா நுண்ணறல் வார வணியிழாய்!
போதராய் காண்பாம புறவு.

இதுவுமது

இ-ள். காந்தளின் மிக்க அரும்புகள் கோளரவிற்கு மாறாகக் கருதிக் காடெல்லாங் கார்ப் பருவத்தைச் செய்து முல்லை அரும்புகளை யீன, வழிகளெல்லாம் நுண்ணிய அறல் மணல் மேலொழுகுதலால், அணியிழையை யுடையாய், புறவினைக் காண்பாம் போதராய்; எ-று. (கூ)

ஙய. அருவி யதிரக் குருகிலை பூப்பத்
தெரியா வினநிரை தீம்பால் பிலிற்ற
வரிவளைத் தோளி வருவார் நமர்கொல்
பெரிய மலர்ந்ததிக் கார்.

இதுவுமது

இ-ள். மலையருவிகள் வந்து முழங்க, குருகிலைகள் பூப்ப, தெரிந்த ஆனினங்கள் இனிய பாலைப் பொழிய, வரிவளைத் தோளினை யுடையாய்! நமர் வருவார் கொல்லோ? பெரியவாயுள்ள அழகுகளை மலர்ந்தது இக்கார் ஆதலான்; எ-று. (ய)

முல்லை முற்றும்.

---

## ச. மருதம்

கூக. பழனம் படிந்த படுகோட் டெருமை
கழனி வினைஞர்க் கெறிந்த பறைகேட்
டுரனழிந் தோடு மொலிபுன லூரன்
கிழமை யுடையனென் றோட்கு.

தலைமகள் வாயின் மறுத்தது

இ-ள். பழனத்தின்கட் படிந்த படுகோட்டினையுடைய எருமை கழனியின்கட் டொழில் செய்வார்க்கு எறிந்த பறை யொலியைக் கேட்டு வெருவி, அறிவழிந்தோடும் ஒலி புனலையுடைய வூரன் என்றோட் குரிமையுடையன் என்னும் இத்துணையே யமையும்; அவன் எனக்கு நல்குதல் வேண் டுவதில்லை; எ-று. (க)

கூஉ. கணைக்கா னெடுமருது கான்ற நறுந்தா
திணைக்கால நீலத் திதழ்மேற் சொரியும்
பணைத்தாட் கதிர்ச்செந்நெற் பாய்வய லூரன்
இணைத்தா னெமக்குமோர் நோய்.

இதுவுமது

இ - ள். திரண்ட காலையுடைய மருதுகள் உகுத்த நறுந் தாதுகள் ஒத்த தாளினையுடைய நீலங்களின் இதழ்மேலே சொரியும் பெருந்தாட் கதிரையுடைய செநநெற் பரந்த வய லூரன் பரத்தையர்க் கின்பத்தை இணைத்தலே யன்றி யெமக்கு மோர் பசலை நோயினை யிணைத்தான்; எ-று. (உ)

௩௩. கடையாயார் நட்பேபோற் காஞ்சிநல் லூர!
வுடைய விளநல முண்டாய் - கடையக்
கதிர்முலை யாகத்துக் கண்ணன்னார் சேரி
எதிர்நல மேன்றுநின் றாய்.

தோழி வாயின் மறுத்தது

இ - ள். கீழாயினார் நட்பே போலக் காஞ்சி மரங்களை யுடைய நல்லூரனே! என்றோழியுடைய இளநலமெல்லாம் முன்பு நுகர்ந்தாய்; பின்னை அக்கதிர் முலையாகத்துக் கண் ணனையார் சேரிக்கட் சென்று மற்றவர் இளமை எதிர் நலத்தை எதிரேற்று நின்றாய்; எ-று. (௩)

௩௪. செந்நெல் விளைவய லூரன் சிலபகற்
றன்னல மென்னலார்க் கீயா னெழுபாண!
பாரித்த வல்குற் பணைத்தோளார் சேரியுள்
வாரிக்குப் புக்குநின் றாய்.

தலைமகள் பாணர்க்கு வாயின் மறுத்தது

இ - ள். செந்நெல் விளைகின்ற வயலினையுடைய ஊரன் முன்பு சிலநாள் தன்னலத்தை யானல்லாதார்க் கீயான்; இப்பொழுது பாரித்த அல்குற் பணைத்தோளையுடைய பரத் தையர் சேரியின்கண் மற்றவர் தலைமகற்கே நல்கும் வாரிக்

குப்புக்கு நின்று ஆராய்வாயாக; ஆகையால் பாண! ஈங்கு நின்றும் எழுவாயாக; எ-று. (௪)

கரு. வேனிற் பருவத் தெதிர்மலரேற் றாதுங்
கூனிவண் டன்ன குளிர்வயல் நல்லூரன்
மாணிழை நல்லா ரிளநல முண்டவர்
மேனி யொழிய விடும.

இதுவுமது

இ - ள். வேனிற்காலத் தெதிர்ந்த மலர்களை ஏற்றுக் கொண்டூதும கூனிவண்டு போலுங் குளிர்வயல் நல்லூரன், ஆகலான் மாட்சிமைப்பட்ட இழையையுடைய நல்லாரின் நலத்தை நுகர்ந்து மற்றவர் உடம்பினை ஒழியவிடும் : எ-று.

கசா. செந்தா மரைமலருஞ் செய்வய னல்லூர! [டாந்
தொந்தான்மற் றுன்னைச் செயப்படுவ தென்னுண்
தந்தாயு நீயே தரவந்த நன்னலங்
கொண்டாயு நீயாயக் கால்.

தோழி வாயில் நேர்வாள் கூறியது

இ - ள். செந்தாமரைகள் மலராநின்ற செய்யப்பட்ட வயல்களையுடைய நல்லூர! நீ செய்த பிழைகட்கு நொந்தால் நின்னைச் செய்யப்படுவ தென்னுள்ளதாம்? என்றோழி நலத்தைத் தந்தாயு நீயே; தரவந்த நன்னலத்தைக் கொண்டாயும் நீயே யாயினால்; எ-று. (௬)

கஎ. பல்காலும் வந்து பயின்றுரையல் பாணகே
ணெல்சேர் வளவய லூரன் புணர்ந்தநா
ளெல்வளைய மென்றோளே மெங்கையர் தம்போல
நல்லவரு ணட்டமி லேம்.

பாணற்குத் தலைமகள் வாயின் மறுத்தது

இ-ள். பலபொழுதும் வந்து பயின்று சொல்லற்க, பாணனே! கேட்பாயாக; நெற்செறிந்த வளவயலூரான் எம்மைப் புணர்ந்த முன்னாளின்கண்ணும் எல்லவளையம் மென்றோளேம்; எங்கையர் தம்மைப்போல நல்ல மடந்தையருள் வைத்து அவனை யெண்ணப்பட்டிலேம்; எ-று. (எ)

நரு. நல்வய லூர னலமுரைத்து நீபாண!
சொல்லிற் பயின்றுரைக்க வேண்டா வொழிதிநீ
யெல்லுநன் முல்லைத்தார் சேர்ந்த விருங்கூந்தல்
சொல்லுமவர் வண்ணஞ் சேர்வு.

இதுவுமது

இ-ள். நல்ல வயலூரனுடைய நன்மை யெல்லாம் நாங்களே அறிந்து உரைக்க வல்லேம்; பாணனே! நீ சொல்லாற் பயின்றுரைக்க வேண்டா; இனி யொழிவாயாக; நிறமிக்க நன்முல்லை மாலை சேர்ந்த இருங்கூந்தலையுடைய பரத்தையே சொல்லாநின்றாள், தன்மாட்டவர் காதலித்த வண்ணத்தையும் எம்மாட்டுள்ள அவரது இகழ்ச்சியையும்; எ-று. (அ)

நசு. பெருங்கயத் தாங்கட் கழுமிய நீலம்
பெரும்புற வாளைப் பெடைகதூஉ மூரன்
விரும்புநாட் போலான் வியனல முண்டான்
கரும்பின்கோ தாயினேம் யாம்.

வாயில் வேண்டிச் சென்றார்க்குத் தலைமகள் வாயின் மறுத்தது

இ-ள். பெருங்கயத்த இடத்தின்கட் செறிந்த நீலங்களைப் பெரும்புறத்தினையுடைய வாளைப்பேடைகள் கதுவுகின்ற ஊரன் எம்மை விரும்பின நாட்போலான், எம்முடைய

வியனலத்தை முன்னே யுண்டான்; ஆதலான் இப்பொழுது கரும்பின் கோதுபோல வாயினேம்; எ-று. (கூ)

சய. ஆம்ப லணித்தழை யாரந் துயல்வருந்
தீம்புன லூரன் மகளிவ ளாய்ந்தநறுந்
தேமலர் நீலம் பிணையல் செறிமலர்த்
தாமரை தன்னையர் பூ.*

இந்நிலத்தின்கண் இன்ன பெற்றியால் வருவாயாகவெனச் சொல்லியது

இ-ள். ஆம்பலாற் செய்யப்பட்ட அணித்தழையும் ஆரமும் அல்குலின்கண்ணும் முலையின் கண்ணும் அசைந்து வருகின்ற தீம்புனலூரன் மகள் இவள், இவ்வூரின்கண் ஆய்ந்த நறுமலர் நீலம்; பெண்பால்கட்டுச் சூடும் பூமாலை செறிந்த மலர்த்தாமரை மாலை அவள் ஐயன்மார்க்குச் சூடும் பூவாதலால் நீயும் தாமரை மாலையைச் சூடி வருவாயாக எ-று. (ய)

மருதம் முற்றும்

---

## நெய்தல்

சக. நெய்தற் படப்பை நிறைகழித் தண்சேர்ப்பன்
கைதைசூழ் கானலுட் கண்டநாட் போலானூர்
செய்த குறியும்பொய் யாயின வாயிழையா
யையகொ லான்றூர் தொடர்பு †

---

* நச்சினார்க்கினியர் மேற்கோள் (தொல்—களா. சூ. ககச)

† அருமை செய்து அயர்ப்பினும் என்பதற்கு உதாரணங் காட்டுவர் நச்சினார்க்கினியர். (தொல்—களா. சூ. ககச)

அல்லகுறிப்பட்டுப் பெயர்ந்த தோழி தலைமகன் சிறைப் புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது

இ-ள். நெய்தற் படப்பை நிறைகழித் தண்சேர்ப் பன் தாழை சூழ்ந்த கானலின்கண் நம்மைக் கண்ட முதனாள் போலானன்; அவனாற் செய்யப்பட்ட குறிகளும் பிழைத் தன. ஆயிழையாய்! அமைந்த நட்புச் செறிந்தன் றாகாதே யிருப்பது! எ-று. (க)

சஉ. முத்த மரும்பு முடத்தாண் முதுபுன்னை
தத்துந் திரைதயங்குந் தண்ணங் கடற்சேர்ப்ப!
சித்திரப் பூங்கொடி யன்னாட் கருளீயாய்
வித்தகப் பைம்பூணின் மார்பு.*

தோழி வரைவு கடாயது

இ-ள். முத்தம்போல வரும்பா நின்ற முடத்தாண் முதுபுன்னையின்கண் வந்து தத்தா நின்ற திரைகள் துளங்கா நின்ற தண்ணங்கடற் சேர்ப்பனே; எழுதிய சித்திரப்பூங் கொடி யன்னாட்கு நின்னருளினாலே நல்காய், வித்தகப் பைம்பூணுடைய நின் மார்பினை; எ-று. (உ)

சங. எறிசுறா நீள்கட லோத முலாவ
நெறியிறாக் கொட்கு நிமிர்கழிச் சேர்ப்ப
னறிவறா வின்சொ லணியிழையாய்! நின்னிற்
செறிவறா செய்த குறி. ¶

---

* 'வேண்டாப்பிரிவினும்' என்பதற்கு உதாரணம் காட்டுவர் நச்சினார்க்கினியர். (தொல்—களா. சூ. கக௪)

¶ நச்சினார்க்கினியர் மேற்கோள். (தொல்—களா. சூ. கஉ௩)

அல்லகுறிப்பட்டுப் பெயர்ந்த தோழி தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது

இ-ள். எறி சுறவையுடைய நீள்கடலின் கண்ணுள்ள வோதம் வந்துலாவ வரிவரியா யிருந்துள்ள மேனியையுடைய இருக்கள் சுழன்று திரிதருஞ் சேர்ப்ப! நின்னறிவின்கண் நீங்காதிருந்த இன்சொல் அணியிழையை யுடையாய்! நின்மனையின் புறத்து அச்சேர்ப்பன் செய்த குறிகள் பல காணுமுளவாகா நின்றன: எ-று. (ங)

சச. இனமீ னிருங்கழி யோத முலாவ
மணிநீர் பரக்குந் துறைவ தகுமோ?
குணநீர்மை குன்றுக் கொடியன்னுள் பக்க
நினைநீர்மை யில்லா வொழிவு. *

தலைமகனைக் கண்ணுற்று நின்ற தோழி வரைவு கடாயது

இ-ள். இனமீன்களையுடைய இருங்கழியின்கண்ணே வந்து ஓதங்களுலாவ நீலமணிபோன்ற நீர் பரக்குந் துறைவனே! தகுவதொன்றோ குணத்தன்மை குன்றுக் கொடியன்னுள் திறத்து நினையு நீர்மையன்றி யொழிதல் நினக்கு? எ-று. (ச)

சரு. கடல்கொழித் திட்ட கதிர்மணி முத்தம்
படமணி யல்குற் பரதர் மகளிர்
தொடலைசேர்த் தாடுந் துறைவவென் றோழி
யுடலு முறுநோ யுரைத்து.

---

* 'காதல் மிகுதி உளப்படக் களனும் பொழுதும் வரைநிலை விலக்கியதில் அருளவேண்டும்' என்பதற்கு உதாரணங் காட்டுவர் நச்சினார்க்கினியர். (தொல்—களவு சூ. ககச)

இதுவுமது

இ-ள். கடல் கொழித்துச் சிந்திய கதிர்மணி முத்தத்தைப் படம் போன்ற அழகிய அல்குற் பரதர்மகளிர் மாலையாகச் சேர்த்து விளையாடும் துறைவனே; என்தோழி மறுகாநிற்கும் தன்னுறு நோயை எனக்குரைத்து; எ-று. (ரு)

௪௬. முருகியல் கான லகன்கரை யாங்கட்
குருகின மார்க்குங் கொடுங்கழிச் சேர்ப்ப
மருவி வரலுற வேண்டுமென் றோழி
யுருவழி யுண்ணோய் கெட.

இதுவுமது

இ-ள். நறுவிரை யுளதாகிய கானலையுடைய அகன்ற கரையின்கட் குருகினம் ஆராநின்ற கொடுங்கழிச் சேர்ப்பனே! பயின்று வருதலைச் செய்யவேண்டும் என்றோழி; மாமைநிறம் அழியாநின்ற உள்ளத்தின்கண் நோயொழிய; எ-று. (சு)

௪௭. அணிபூங் கழிக்கான லற்றைநாட் போலான்
மணியெழின் மேனி மலர்பசப் பூரத்
துணிகடற் சேர்ப்பன் றுறந்தான்கொ றோழி
தணியுமென் மென்றோள் வளை.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழியாற் சொல்லெடுப்பப் பட்டுத் தலைமகள் சொல்லியது

இ-ள். அணிந்த பூக்களையுடைய கழிக்கானலின்கட் கண்ட அற்றைநாட் போலான்; மணியெழின் மேனியின்கண் மிக்க பசப்பேறும் வகை துணிகடற் சேர்ப்பன் எம்மை மிகவே துறந்தான் கொல்லோ? என் மென்தோள்வளைகள் நீங்கா நின்றன; எ-று. (எ)

௩௮. கறங்குமணி நெடுந்தேர் கண்வா ளறுப்பப்
பிறங்கு மணன்மே லலவன் பரப்ப
வறங்கூர் கடுங்கதிர் வல்விரைந்து நீங்க
நிறங்கூறு மாலை வரும்.

தோழி தலைமகளை இரவுக்குறி நயப்பித்தது

இ-ள். ஒலிக்கு மணியையுடைய நெடுந்தேர் கண்டார் கண்ணினொளியை யறுப்ப, உயர்ந்த மணன்மேல் அலவன் பரப்ப, வெம்மை மிக்க கடிய வெயில் கடிதாக நீங்க, செக்கர் நிறமாக நிறமிக்க மாலைப் பொழுதின்கண் நங் காதலன் வரும்; எ-று. (அ)

௩௯. மயில்கொன் மடவாள்கொன் மாநீர்த் திரையுட்
பயில்வதோர் தெய்வங்கொல் கேளீர் குயில்பயிருங்
கன்னி யிளஞாழற் பூம்பொழி னோக்கிய
கண்ணின் வருந்துமென் னெஞ்சு.*

தலைமகன் பாங்கற்குச் சொல்லியது

இ-ள். மயிலோ? மடவாளோ? மாநீர்த் திரையின் கட் பயின்றுறைவதோர் தெய்வங் கொல்லோ? கேளீரே! குயில்கள் கூவாநின்ற கன்னியிள ஞாழற் பூம்பொழிலின்கண் அவரை நோக்கிய என்கண்ணினு மிக வருந்தாநின்ற தென் னெஞ்சு; எ-று. (௯)

௪௰. பவளமு முத்தும் பளிங்கும் விரைஇப்
புகழக் கொணர்ந்து புறவடுக்கு முன்றிற்
றவழ்திரைச் சேர்ப்பன் வருவான்கொ றோழி
திகழுந் திருவமர் மார்பு.

---

* நச்சினார்க்கினியர் மேற்கோள். (தொல் - களவியல், சூ. ௧0௬)

பகற்குறிக்கட் தலைமகன் சிறைப்புறத்தானாகத்
தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி வரைவு கடாயது

இ - ள். பவளத்தினையும் முத்தினையும் பளிங்கினையும கலந்து, பிறர் புகழக் கொண்டுவந்து, மனை சூழ்ந்த படைப் பையை யணைந்த முற்றத்தின்கண் வந்து வழங்குகின்ற திரையையுடைய சேர்ப்பன் விரைந்து வருவான் கொல்லோ தோழி; முன்புபோலப் பொலிவழிந்திரா நின்றது அழ கமைந்த மார்பும் பொலிவுடைத்தாய் இருந்ததாதலான் எம்பெருமான் விரைந்து வருமென்று முற்கொண்டு நமக்கு அறிவிக்கின்றதுபோலும்; எ-று. (ῶ)

நெய்தல் முற்றும்

---

திணைமொழி ஐம்பது
முற்றும்



P. R. RAMA IYAR AND CO., PRINTERS, MADRAS

# அருஞ்சொல்லகராதி

அகவுதல்—அழைத்தல்
அஞ்சனம்—மை
அடைதரல்—மருவல்
அதர்—வழி
அமை—மூங்கில்
அலர்—பழிமொழி
அலவன்—நண்டு
அல்குதல்—தங்குதல்
அறல்—கருமணல்
அனுங்கல்—வருந்தல்
ஆயர்—இடையர்
ஆர்த்தல்—ஒலித்தல்
இயை பொருள்—இயற்றும் பொருள்
ஈர்—குளிர்ச்சி
உகளல்—குதித்தோடுதல்
உடலல்—மயங்கல்
உரறல்—முழங்கல்
உரன்—அறிவு
உரு—அழகு
உரும்—இடி
ஊரன்—மருதநிலத்தலைவன்
எயிறு—பல்
எயினர்—வேடர்
எல—பெண்பால் முன்னிலை மொழி
எல்—இரவு, விளக்கம்; 'எல்லே யிலக்கம்' தொல். இடை. சூ. உ௬௧.
எழால்—புல்லூறு
எழிலி—மேகம்
ஏ—பெருமை; 'ஏ பெற்றாகும்' தொல். உரி. சூ. ௩௦௪.
ஏர்—அழகு
ஏறு—உருமேறு
ஏனல்—தினைப்புனம்
ஐ—வியப்பு; 'ஐவியப்பாகும்;' தொல். உரி. சூ. ௩௮௫.
ஓங்கல்—மலை
ஓதம்—அலை
கணம்—திரட்சி
கணி—சோதிடன்
கணைக்கால்—திரண்டகால்
கடி—புதுமை
கடுவன்—ஆண்குரங்கு
கதிர்—வெயில்
கதுவுதல்—கலத்தல்
கயம்—குளம்
கருவி—தொகுதி; 'கருவி தொகுதி.' தொல். உரி. சூ. ௩௫௪.
கலை—ஆண்மான்
கல்—மலை
கழுமல்—கலத்தல்
களிறு—ஆண் யானை
கறங்கல்—ஒலித்தல்
கனை—மிகுதி
கன்னிஞாழல்—பூவெடாத கொன்றை
காய்வர்—கோபிப்பர்
கால்—காற்று

கானல்—கடற்கரைச் சோலை
கானவர்—வேடர்
கான்ற—உகுத்த
கிழமை—உரிமை
குருகு—நீர்வாழ் பறவை
குருதி—உதிரம்
குருந்து—ஒருவகை மரம்
குறம்பு—பாலைநிலத்தூர், வேடர் வாழுமிடம்.
கூற்று—எமன்
கூனி—வளைவை உடையது
கைதை—தாழை
கொட்கல்—சுழலல்
கொன்—பயனின்மைப் பொருளுணர்த்தும் இடைச் சொல்
கோடல்—காந்தள்
கோடு—கொம்பு
கௌவை—பழிமொழி
சிறை—இறகு
சிறைப்புறம்—தாமிருக்கும் இடத்தின் பக்கம்
சுணங்கு—தேமல்
செய்—கழனி
சேயவர்—அகலிடம் சென்றவர்
சேர்ப்பன்—நெய்தல் நிலத் தலைவன்
ஞாழல்—கொன்றை
தலைசிறத்தல்—மேன்மேல் மிகுதல்
துடி—உடுக்கை
துயல்வரல்—அசைதல்
தூர்த்தல்—செலுத்துதல்
தேர்தல்—ஆராய்தல்
தொடர்பு—நட்பு
தொடி—வளையல்
தொடலை—மாலை
நசை—விருப்பம்
நீத்தம்—வெள்ளம்
நீர்மை—தன்மை
படப்பை—நெய்தல் நிலத்தூர்
படைத்து மொழிகிளவி—இல்லாத ஒன்றைப் புனைந்து மொழியும் சொல்
பம்பல்—ஒலித்தல்
பயிர்தல்—அழைத்தல்
பரதர்—நெய்தல் நிலமாக்கள், செம்படவர்
பழனம்—வயல்
பாங்கர்—பக்கம்
பாரித்த—பெரிய
பாறு—பருந்து
பிணங்கல்—நெருங்கல்
பிணையல்—மாலை
பிலிற்றல்—சொரிதல்
பிறங்கல்—உயர்தல்
புல்லூறு—ஒருவகைப்புள்
புறவு—முல்லைநிலம்
புலம்—பொன்
பெற்றி—தன்மை
பெற்றிய—பெரிய
மந்தி—பெண்குரங்கு
மலிதல்—மிகுதல்
மாநீர்—மிக்கநீர்
மாந்தல்—பருகல்
மாழை—அழகு
முகை—அரும்பு
முடைத்தாள்—வளைந்த அடி
முரண்—வலி
முரலல்—ஒலித்தல்
முருகு—மணம்
முழவு—மத்தளம்

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு—ம.

## பதினெண் கீழ்க்கணக்கு

கண்ணன் சேந்தனார்

இயற்றிய

# திணைமொழி ஐம்பது

மூலமும்

[பழைய உரையும்]



சென்னை, பச்சையப்பன் காலேஜ்

தமிழாசிரியர்

மணி. திருநாவுக்கரசு முதலியார் அவர்களால்

பரிசோதிக்கப்பட்டன.

திருநெல்வேலித்

தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

லிமிடெட்

பதிவு செய்தது]  துந்துபி ௵ ஐப்பசி ௴  [விலை அணா 5.

முள் எயிறு—கூரிய பல்
முறி—தளிர்
முறுவல்—சிரிப்பு
யாழ்—வீணையில் ஓர் வகை
வஞ்சினம்—சூளுறவு
வரை—மலை
வரைவு—மணம்
வலந்த—சொன்ன
வறம்—வெம்மை
வாங்கல்—வளைதல்
வாரி—மிகுதி, மிக்க இன்பம்
வாள்—ஒளி
விடலை—காளை
வித்தகம்—பொன்
வியன்—அகற்சி
விரை—வாசனை
விரைதல்—கலத்தல்
விறல்—மிகுதி
வீங்கல்—பெருத்தல்
வெதிர்—மூங்கில்
வெறி—வாசனை
வெற்பன்—குறிஞ்சிநிலத் தலைவன்

உ

திருச்சிற்றம்பலம்

# பாயிரம்

தமிழ்மொழி பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தோற்றமுற்று விளங்கும் ஓர் அருமந்த மொழியாம். தமிழர் கல்வி, வீரம், செல்வம், வாணிகம், சிற்பம், கைத்தொழில் முதலியவற்றிற் சிறந்து திகழ்ந்து வந்தனர். தமிழ் வேந்தராகிய பாண்டியர் தமது மொழியாகிய தமிழினிடத்து மிக்க ஆர்வமும் பற்று முடையாராய் அதனை வளர்த்தற்குப் பலவாறு முயன்று வந்ததேயன்றி, சங்கம் நிறுவி நல்லிசைப் புலவர் பலரைக் கொண்டு, தமிழை ஆராய்ந்தும் வந்தனர். அக்காலத்தில் தமிழ்மொழியில் அளவிறந்த நூல்கள் எழுந்தன.

இவ்வாறு தமிழ் மன்னர்களால் மும்முறை சங்கங்கள் நிறுவப்பட்டுத் தமிழ் ஆராயப்பட்டது. மும்முறை நடைபெற்று வந்தமையான் சங்கம் முச்சங்கம் எனப் படுவதாயிற்று.

தமிழர் தவக்குறைவானே தலைச்சங்கத்துத் தோன்றிய நூல்களுள் ஒரு சிலவே பெயர் மாத்திரையிற் கேட்கப்படுகின்றன. இடைச்சங்கத்து நூல்களுள் இன்றுவரை முழு நூலாக மிளிர்வது தொல்காப்பியம் ஒன்றே. கடைச்சங்கத்து நூல்களுள் இறந்தன போக, எஞ்சிநின்றவற்றைப் பிற்காலத்துச் சான்றோர் அளவு, யாப்பு முதலிய காரணம் பற்றி மேற்கணக்கு, கீழ்க்கணக்கென இருவகைப் படுத்தினர். மேற்கணக்கில் பத்துப்பாட்டு எட்டுத்தொகை எனத்

தொகுக்கப்பட்ட இரண்டு தொகை நூல்களும் அடங்கும். கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டாம். அவை பதினெட்டே என்பதும் அவற்றின் பொது வியல்பு இன்னதென்பதும் தொல்காப்பியச் செய்யுளியலில் உ௩௯ ஆம் சூத்திரத்திற்குப் பேராசிரியர் பின்வருமாறு எழுதிய உரையான் தெள்ளி தின் அறியப்படும் என்க.

'தாயபனுவலோ' டென்றது அறம் பொருள் இன்ப மென்னும் மூன்றற்கும் இலக்கணஞ் சொல்லுப, வேறிடையிடை அவையன்றியுந் தாய்ச் செல்வ தென்றவாறு. அஃ தாவது பதினெண் கீழ்க்கணக்கெ‌ன உணர்க. அதனுள் இரண்டடியானும் ஐந்தடியானும் ஒரோ செய்யுள் வந்தவாறும் அவை சிலவாய மெல்லிய சொற்களான் வந்தவாறும் அறம் பொருள் இன்பமென அவற்றுக்கு இலக்கணங் கூறிய பாட்டுப் பயின்றுவருமாறுங் கார்நாற்பது, களவழி நாற்பது முதலாயின வந்தவாறுங் கண்டுகொள்க.'

இனி, பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் இன்னின்ன என்பதைப் பின்வரும் பழஞ் செய்யுள் இனிது புலப்படுத்துமாறு காண்க.

'நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி—மாமூல
மெய்ந்நிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு'

இவ்வெண்பா பழம்பிரதிகளுள் 'கைந்நிலையோ டாங் கீழ்க்கணக்கு' 'இன்னிலைய காஞ்சியோடு' 'ஐந்தொகை முப்பால் கடுகம்' 'நன்னிலைய வாங்கீழ்க் கணக்கு' எனச் சிறிது சிறிது வேறுபட்டுக் காணப்படுதலினால், புலவர் பதினெட்டாவது நூல் இன்னதெனத் துணிதற்கண் வெவ்வேறு கருத்துடையராகின்றனர். ஒரு சாரார் கைந்

நிலையே பதினெட்டாம் நூலென்றும், மற்றொரு சாரார் ஐந்திணை என்பதற்கு ஐந்திணைப்பொருள் பற்றிவரும் ஐந்து தொகை நூலெனப் பொருள்கொண்டு, 'திணைமாலை' எனப் பழைய உரைகளிற் பயின்றுவரும் நூலே அப்பதினெட்டாவது என்றுங் கூறுவர். இனியொரு சாரார் மேலே கூறியவாறு ஐந்து திணை நூல்களையும் உடன்பட்டு, அதனோடு 'இன்னிலை' 'கைந்நிலை' என்னும் நூல்களையுங் கூட்டிக் கீழ்க்கணக்கு நூல்கள் இன்னின்னவெனக்கூறும் வெண்பாவின்கண் தொகைவரையறை காணப்படாமையின், பதினெட்டுக்குமேலும் இருபது நூல்கள் கீழ்க்கணக்கைச் சார்ந்தனவெனக் கொள்ளுதற்கண் வரக் கடவதாய இழுக்கென்னை என்பர். அது பொருந்தாமை மேலே காட்டிய பேராசிரியர் உரையான் இனிது உணரப்படும். அதனுள் அவர் பதினெண் கீழ்க்கணக்கெனத் தெளிவுறக் கூறியிருத்தல் காண்க.

திணைமொழி ஐம்பது என்னும் இந்நூல் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. சாத்தந்தையார் மகனார் கண்ணன் சேந்தனார் என்னும் நல்லிசைப் புலவரால் இயற்றப்பட்டது. இவ்வாசிரியரைக் குறித்து யாதும் தெரிந்திலது. இந்நூற் செய்யுட்களிற் பல, தொல்காப்பிய உரையின்கண் பலவிடத்தும் எடுத்தாளப்பட்டுள்ளன. இஃது ஒவ்வோர் திணைக்கும் பப்பத்துச் செய்யுளாக ஐந்திணையுங் குறித்துக் கூறும் ஐம்பது பாட்டுக்களை யுடையது. இதிலுள்ள பாக்கள் எதுகை, மோனை முதலியவற்றைப் பெரும்பான்மையும் பெற்றும், தெள்ளிய இன்னோசை வாய்ந்தும், பொருள் புலப்பாடு சிறந்தும் தோன்றுதலின் கடைச்சங்கத் திறுதியின்கண் இவ்வாசிரியர் இதனை இயற்றினரென ஊகிக்கப்படும். கடைச்சங்க காலம் இற்றைக்கு ஏறக்குறைய இரண்

டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் ஆதலின் இவரது காலமும் அன்னதாதல்வேண்டும். 'கணம்' 'சித்திரம்' 'வித்தகம்' 'குணம்' 'பவளம்' முதலிய மிகச் சில வடசொற்களே இதன்கண் பயின்றுள்ளன. அவையும் எதுகை, மோனை, வழங்கற்பாடு, ஓசையினிமை முதலிய நோக்கம் பற்றிப் பெய்துரைக்கப்பட்டன என்பது இந்நூலிலுள்ள பாடல்களைக்காண்போருக்கு வெளிறித் தோன்றும். இந்நூலகத்தே, 'கணமுகை கையெனக் காந்தள் கவின, மணமுகையென்றெண்ணி மந்தி கொண்டாடும் விறன்மலை நாட' 'பலவின் பழம்பெற்ற பைங்கட்கடுவன் எல வென்றிணைபயிரு மேகல் சூழ் வெற்பன்' 'பழனம் படிந்த படுகோட் டெருமை, கழனி வினைஞர்க் கெறிந்த பறைகேட், டினமிரிந்தோடு மொலிபுனலூரன்' என ஆங்காங்கு வருவனவற்றுல் உள்ளுறைப் பொருள் அவ்வவ்விடங்களில் இருத்தல் நன்குணரப்படும். சொல்லும் பொருளுந் தித்திக்க, வகுத்து எடுத்துக் கொண்ட துறைக்கேற்ப, இயற்கை நெறியைக் கடவாத பல வுவமைகளானும் தோற்றங்களானும் சித்திரிக்காது, இயற்கை அமைப்பின் சித்திரமே சித்திரமாக நன்கு புலப்படுமாறு தமது பெரும் புலமையானும் ஆழ்ந்தகன்ற நுண்ணுணர்வானுங், கண்டவற்றைக் கண்டவாறே பாடியருளிய இப்புலவரது செந்நாப்புலமை எக்காலத்தாரானும் எவ்விடத்தும் மகிழ்ந்து போற்றற் குரித்தென்பதிற் சிறிதும் ஐயமின்று. இத்தகைய நூல்களைக் கற்காது வாணாள் வீணாள் கழிக்கும் தமிழர் ஏழைமை பெரிதும் இரங்கற்பாலது.

இதற்குப் பழைய உரை ஒன்றுண்டு. அது பாட்டின் பொருளைப் பொழிப்பாக நன்று எடுத்துரைப்பது. பதசாரம், உள்ளுறைப் பொருள், இலக்கண விசேடம் முதலிய வேறொன்றும் அதிற் காணப்படவில்லை. இது போன்ற

உரை பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள் பலவற்றிற்கும் உளது. இவ்வுரையாசிரியர் இன்னாரெனப் புலப்படவில்லை. உரையின்கண், இப்போது எளிதில் பொருள் விளங்கலாகாத சொற்கள் அவ்வாறே பெய்துரைக்கப்பட்டுள்ளன.

இது 1918 ஆம் ஆண்டில் இலக்கண விளக்கப் பரம்பரை, ஸ்ரீ சோமசுந்தர தேசிகரால் பரிசோதித்து, திருவாரூர்த் தமிழ்ச் சங்கத்தாரால் வெளியிடப்பட்டது. இத் தமிழ்ச் செல்வர்கட்குத் தமிழகம் பெரிதும் கடமைப்பட்டதாகும்.

இவ்வச்சிட்ட பிரதியையும் எமக்குக் கிடைத்த இரண்டு பிரதிகளையும் ஒருங்கு வைத்து ஒப்பிட்டுப் பார்த்ததில், சிறந்த திருத்தங்கள் பல காணப்பட்டன. ஆதலின், அவை தமிழுலகுக்குப் பயன்படும் என்னுங் கருத்தான், இந்நூல் அப்பிரதிகளைக்கொண்டு ஒருவாறு ஆராயப்பட்டு அருஞ் சொல்லகராதியுடன் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப் பெறுவதாயிற்று.

பெரும்புலவர்களே கையிடத்தக்க இச்சிறிய பெரிய நூலைப் பரிசோதிக்கும்படி செலுத்திய திருவருளை வழுத்துகின்றேன்.

‘குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.’

ஆலந்தூர்,
18-10-22.

இங்ஙனம்,
மணி. திருநாவுக்கரசன்.

# பாட்டு முதற்குறிப் பகராதி


| செய்யுள் | பக்கம் | செய்யுள் | பக்கம் |
|---|---|---|---|
| அஞ்சனக் காயா ... | ௧௧ | கோடலங் கூர்முகை | ௧௪ |
| அணிபூங் கழிக் ... | ௨௨ | சிறுபுன் புறவொடு | ௮ |
| அதிர்குர ... | ௧௪ | செஞ்சுணங்கின் ... | ௧௨ |
| அருவி யதிரக் ... | ௧௪ | செந்தாமரை ... | ௧௭ |
| ஆம்பலணித் ... | ௧௯ | செந்நெல் விளை ... | ௧௬ |
| ஆய ரினம ... | ௧௩ | சென்றூர் வருவர் ... | ௧௨ |
| இருங்கடன் ... | ௧௩ | நல்வய லூர ... | ௧௮ |
| இனமீ னிருங்கழி ... | ௨௧ | நெய்தற் படப்பை ... | ௧௯ |
| எறிசுறா நீள் கட ... | ௨0 | பலவின் பழும் ... | ௫ |
| ஏற்றிய வில்லி ... | ௧0 | பல்காலும் வந்து ... | ௧௭ |
| ஏன விடத் ... | ௩ | பவழமு முத்தும் ... | ௨௩ |
| ஓங்க விறுவரை ... | ௨ | பழனம் படிந்த ... | ௧௫ |
| ஓங்கு குருந்தோ ... | ௭ | பிணி நிறந் தீர்ந்து ... | ௫ |
| கடல் கொழித் ... | ௨௧ | புன்னை பொறி ... | ௭ |
| கடையாயார் ... | ௧௬ | மயில்கொன் ... | ௨௩ |
| கணமுகை ... | ௨ | முத்த மரும்பு ... | ௨0 |
| கணைக்கா ... | ௧௫ | முரிபரல வாகி ... | ௭ |
| கதிர்சுடக் ... | ௯ | முருகியல் கான ... | ௨௨ |
| கருங்கயத் தாங்கட் | ௧௮ | மென் முலைமே ... | ௧௧ |
| கருங்கான் ... | ௮ | யாழுங் குழலு ... | ௪ |
| கருவியல் ... | ௧௨ | யானை யுழலு ... | ௪ |
| கலையொடு ... | ௧0 | வானுயர் ... | ௧ |
| கல்லதர் வாயிற் ... | ௯ | விரைகமழ் ... | ௩ |
| கழுநீர் மலர் ... | ௬ | வேங்கை மலர ... | ௪ |
| கறங்குமணி ... | ௨௩ | வேனிற் பருவத் ... | ௧௭ |

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திணைமொழி ஐம்பது

## மூலமும் உரையும்

---

### க. குறிஞ்சி

க. ..................................................

..................................................

*வானுயர்வெற்ப ! விரவின் வரல்வேண்டா
யானை யுடைய சுரம்.

அஞ்சி - அச்சுறுத்துவது

இதன் பொருள் ...... ~~அண்டர்~~ (நு)ண்டா துகள் பொழிகின்ற வானளவு முயர்ந்த வெற்பனே! இரவின்கண் வரல் வேண்டா...............யானை வருகின்ற சுரங்களாதலான்; என்றவாறு. (க)

---

* நச்சினார்க்கினியர் உரையில்கண்டவை (தொல்-செய்) 74

௨. நணமுகை கையெனக் காந்தள் கவின
மணமுகை யென்றெண்ணி மந்திகொண் டாடும்
விறன்மலை நாட! வரவரி தாங்கொல்லோ
புனமு மடங்கின காப்பு.*

சேறிப்பறிவுறீஇ வரைவு கடாயது

இ - ள். திரட்சியையுடைய மொட்டுக்களைக் கை யென்று கருதும்படி காந்தள் அழகுபெற அரும்ப, அதன் மணத்தையுடைய முகைகளென்று கருதி, மந்திகள் கொண் டாடுகின்ற மிகுதியையுடைய மலைநாடனே! நீ இங்கு வருத லரிதாங் கொல்லோ? புனங்களுந் தினையரியப்பட்டுக் காவ லொழிந்தன; எ-று. (௨)

௩. †ஓங்க லிறுவரைமேற் காந்தள் கடிகவினப்
பாம்பென வோடி யுருமிடிப்பக் கண்டிரங்கும்
பூங்குன்ற நாடன் புணர்ந்தவந் நாட்போல
‡ஈங்கு நெகிழ்ந்த வளை.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச்
சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது

இ - ள். மலையினது பக்கமலைமேற் காந்தள் புதிதாக அழகு பெறுதலால், அவற்றின் முகைகளைப் பாம்பென்று

* நச்சினார்க்கினியர். (தொல்—களவியல், மேற்கோள். சூ. ௧௧௪)

† இதனை, நச்சினார்க்கினியர் இரவுக்குறி நயந்து கூறியது என்பதற்கு உதாரணங் காட்டுவர். (தொல்—களவியல், சூ. ௧௧௧)

‡ நீங்கி - நச்சினார்க்கினியர் கொண்ட பாடம். (தொல் - களவியல் மேற்கோள்.)

கருதிச் சென்று உருமு இடித்தலான், அவற்றைப் பிறர் கண்டிரங்குகின்ற பூங்குன்ற நாடன் புணர்ந்த அந்நாள்போலவாய் இக்காலத்து நெகிழ்ந்து கழன்ற வெள்வளைகள்; எ-று.

௪. *ஏன லிடத்திட்ட வீர்மணிகொண் டெல்லிடைக்
கானவர் மக்கள் கனலெனக் கைகாய்த்தும்
வானுயர் வெற்பன் வருவான்கொ லென்றோழி
மேனி பசப்புக் கெட. †

தலைமகனைத் தோழி இரவுக் குறி நயப்பித்தது

இ-ள். ஏனலிடத்திட்ட குளிர்ந்த மணிகளைக் கொண்டு இரவின்கட் குறவர் மக்கள் தங்குளிர் நீங்கக் காயும்........வெற்பன் ஈங்கு வருவான் கொல்லோ? என்னுடைய தோழி மேனியிற் பசப்புக் கெட; எ-று. (௪)

௫. விரைகமழ் சாரல் விளைபுனங் காப்பார்
வரையிடை வாரன்மின் ஐய!—உரைகடியர்
வில்லினர் வேலர் விரைந்துசெல் லம்பினர்
கல்லிடை வாழ்க ரமர்.

பின்னின்ற தலைமகனைக் காவன்மிகுதி சொல்லிச் சேட்படுத்தது

இ-ள். விரை கமழாநின்ற சாரலின்கண் விளைபுனங் காப்பர்கள், இம்மலையின்கண் வரவேண்டா ஐயனே! கடுஞ் சொல்லினர், வில்லினர், வேலர், விரைந்து செல்லுமம்பினர் மலையின்கண் வாழ்வாராகிய வெமர்; எ-று. (௫)

---

* 'ஏனமிடந்திட்ட' வெனவும் பாடம்; அதற்குப் பன்றியால் தோண்டப்பட்ட எனப்பொருள் கொள்க.

† இதனை, தலைவன் வருவானென்றதற்கு உதாரணங் காட்டுவர் நச்சினார்க்கினியர் (தொல்—களவியல், சூ. ௧௧௪)

௬. யானை யுழூஉ மணிகிளர் நீள்வரைக்
கானக வாழ்க்கைக் குறவர் மகளிரேம்
ஏனலுள் ஐய ! வரவுமற் றென்னைகொல் ?
காணினுங் காய்வ ரெமர். *

இதுவுமது

இ - ள். யானைகள் உழன்று திரியும் அழகு மிக்க நீள் வரைக் கானகத்து வாழும் வாழ்க்கையினையுடைய குறவர் மகளிரேம் யாங்கள்; ஏனலின் கண் நீரே வருதல் என்ன பயனுளது? ஐய! நம்மைக் காணினும் நீர் வந்தீரென்று கேட்பினும் நம்மை வெகுள்வர் எமர்; எ-று. (௬)

௭. யாழூங் குழலு முழவு மியைந்தென
வீழு மருவி விறன்மலை நன்னாட !
மாழைமா னோக்கியு மாற்றா ளிரவரின்
ஊரறி கௌவை தரும்.

இரவுக்குறி விலக்கி வரைவு கடாயது

இ - ள். யாழுங் குழலு முழவுந் தம்முள் பொருந்தி யொலித்தாற்போல வீழாநின்ற அருவியையுடைய மிக்க மலை நாடனே ! மதர்ப்பினையுடைய மான்போன்ற நோக்கினை யுடையாளும் ஆற்றமாட்டாள். நீர் இரவின்கண் வருதிராயின் ஊரும் பிறரும் அறியும் அலரைத் தரும்; எ-று. (௭)

௮. வேங்கை மலர வெறிகமழ் தண்சிலம்பின்
வாங்கமை மென்றோட் குறவர் மகளிரேஞ்
சோர்ந்து குருதி யொழுகமற் றிப்புறம்
போந்ததில் ஐய ! களிறு.

---

* இதனை, அஞ்சி அச்சுறுத்தலின்கீழ் தமரையஞ்சிக் கூறியது என்பதற்கு உதாரணங் காட்டுவர் நச்சினார்க்கினியர். (தொல்—களவியல், சூ. ௨௩)

..............................படை *

இ-ள். வேங்கை மலர்தலான் வெறி கமழாநின்ற தண் சிலம்பின்கண்ணே வளைந்த மூங்கில் போன்ற மெல்லிய தோளையுடைய குறவர் மகளிரேம் யாங்கள். குருதிபாய்ந் தொழுக இவ்விடத்தின்கண் போந்ததில்லை ஐயனே! களிறு; எ-று. (அ)

௯. பிணிநிறந் தீர்ந்து பெரும்பணைத்தோள் வீங்க
மணிமலை நாடன் வருவான்கொல் ? தோழி !
கணிநிறை வேங்கை மலர்ந்துவண் டார்க்கும்
மணிநிற மாலைப் பொழுது.†

தோழி தலைமகளை இரவுக்குறி நயப்பித்தது

இ-ள். நோயான் வந்த நிறந் தீர்ந்து, பெரும்பணைத் தோள் பெருப்ப அழகிய மலைநாடன் வருவான் கொல்லோ? தோழி! கணியைப்போல நாட்சொல்லும் நிறைவேங்கை மலர்ந்து வண்டுகள் ஒலியாநின்ற நீலமணிபோன்ற நிறத்தினையுடைய மாலைப் பொழுதின்கண் ? எ-று. (௯)

௰. பலவின் பழம்பெற்ற பைங்கட் கடுவன்
எலவென் றிணைபயிரு மேகல்சூழ் வெற்பன்
புலவுங்கொ ரோழி! புணர்வறிந் தன்னை
செலவுங் கடிந்தாள் புனத்து.‡

---

* இதனை, தலைவனைப்பேதமை யூட்டினது என்பதற்கு உதாரணங் காட்டுவர் நச்சினார்க்கினியர். (தொல் - களவியல், சூ. ௧௧௪)

† நச்சினார்க்கினியர் மேற்கோள். (தொல் — களவியல், சூ. ௧௧௧)

‡ இதனை, மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழி தோழிக்கு கினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தல் என்பர் நச்சினார்க்கினியர் .(தொல்—களவியல், சூ. ௧௧௧)

தலைமகன் சிறைப்புறத்தானாகப் படைத்துமொழி கிளவியால் தோழிவரைவு கடாயது

இ-ள். பலாப்பழத்தினைப் பெற்ற பசுங்கண்ணினை யுடைய குரங்கினுட் கடுவன், ஏடி! யென்று தனக்கினை யாகிய மந்தியை யழைக்கும் பெற்றிய கற்கள் சூழ்ந்த வெற்பன் நம்மை யூடுங்கொல்லோ? தோழி! நங்காதலரோடு புணர்ந்த புணர்ச்சியை யறிந்து புனத்துச் செல்லும் செல வினையும் தவிர்த்தாள் அன்னை யாதலால்; எ-று. (ய)

குறிஞ்சி முற்றும்.

---

## உ. பாலை

கக. கழுநீர் மலர்க்கண்ணாய்! கௌவையோ நிற்கப்
பொருணீரார் காதலர் பொய்த்தனர் நீத்தார்
அழிநீர வாகி யரித்தெழுந்து தோன்றி
வழிநீ ரறுத்த சுரம்.*

தலைமகனது செலவுணர்ந்து வேண்டாத மனத்தாளாய்த் தலைமகள் தோழிக்குச் சொல்லியது

இ-ள். செங்கழுநீர் மலர் போன்ற கண்ணினையுடையாய்! அவர் பிரிந்ததால் நிகழும் அலர் நிற்கப் பொருண் மேல் நீர்மையை யுடையராய் நங்காதலர் முன் சொல்லிய சொல்லைப் பொய்த்து நம்மை நீங்குவார் போனார்; அங்குள்ளார் அழியும் நீர்மையவாகிப் பசைபுறு தனக்குத் தோன்றிப் போம் வழியின்கண் நீரறுத்த சுரங்களின் கண்ணே; எ-று. (க)

---

* நம்பி அகப்பொருள்—சூ. கஎ0. தஞ்சைவாணன் கோவை உகூச செய்யுள் நோக்குக.

கஉ. முரிபரல வாகி முரணழிந்து தோன்றி
எரிபரந்த கான மிவைபொருட்குப் போவீர்
அரிபரந்த வுண்கண்ணாள் ஆற்றுமை நும்மின்
தெரிவார்யார் தேரு மிடத்து.

யான் பிரியத் தலைமகளாற்றுமோ நீ அறிவாயாகென்ற தலைமகற்குத் தோழி சொல்லியது

இ - ள். முரிபரந்த பருக்கையினையுடையவாய் வலியழிந்து தோன்றி எரிபரந்த கானத்தின்கண் இயற்றும் பொருட் பொருட்டுச் செல்வீர். அரிபரந்த உண்கண்ணாள் ஆற்றுளென்னுந் திறத்தை நும்மைப் போலப் பிறரறிகிற்பார் யார் ஆராயுமிடத்து; எ-று. (உ)

கங. ஓங்கு குருந்தோ டரும்பீன்று பாங்கர்
மராஅ மலர்ந்தன தோன்றி விராஅய்க்
கலந்தனர் சென்றார் வலந்தசொ லெல்லாம்
பொலங்தொடீஇ பொய்த்த குயில்.

பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது

இ - ள். ஓங்கிய குருந்தோடே கூட அரும்புகளை யீன்று பாங்காகிய மராஅமரமும் விளங்கி மலர்ந்தன; புணர்ந்து விரவிக் கலந்து சென்ற நங்காதலர் வலந்த சொல்லெல்லாம் பழுதாக்கின குயில்கள் பொலந்தொடீ! எ-று. (ங)

கச. புன்னை பொறிமலரும் பூந்தண் பொழிலெல்லாஞ் (கு
செங்கட் குயிலக வும்போழ்து கண்டும்
பொருணசை யுள்ளந் துரப்பத் துறந்தார்
வருநசை பார்க்குமென் னெஞ்சு.

இதுவுமது

இ - ள். புன்குகள் பொன்போல மலரப் பூந்தண் பொழில்களெல்லாஞ் செங்கட் குயில்கள் கூவுகின்ற போழ்து கண்டும், முன்பு பொருணசையை யுடைய ஊக்கந் துரப்ப நம்மை நீங்கினர்; வருநசையைப் பாராநின்றது என் நெஞ்சு; எ-று. (ச)

கரு. சிறுபுன் புறவொடு சிற்றெறூழல சீறும்
நெறியரு நீள்சுரந் தல்குவர்கொல் தோழீ!
முறியெழின் மேனி பசப்ப வருளொழித்
தார் பொருள் வேட்கை யவர்.

ஆற்றுளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலென்பதுபடச் சொல்லியது

இ - ள். சிறிய புல்லிய புறவினொடு சிறிய புல்லூறு வெகுளும் வழியரிய நீள்சுரத்தின்கட் டங்குவர் கொல்லோ? தோழீ! தளிரினது அழகு போன்றிருந்த என்மேனி பசப்ப, நம் மேலுள்ள அருளினை ஒழிந்து நிறைந்த பொருளினை வேட்ட வேட்கையை யுடையவர்; எ-று. (ரு)

கசு. கருங்கான் மராஅ நுணவோ டலர
இருஞ்சிறை வண்டினம் பாலை முரல
அரும்பிய முள்ளெயிற் றஞ்சொன் மடவாய்!
விரும்புநாம் செல்லு மிடம்.

புணர்ந்துடன் போகிய தலைமகன் தலைமகளை ஆற்றுவித்துக் கொண்டு சொல்லியது

இ - ள். கருங்காலினையுடைய மராமரங்கள் நுணவொடு மலர, இருஞ்சிறை வண்டினங்கள் பாலையென்னும்

பண்ணை முரல, அரும்பிய முள்ளெயிற்றினையும் அழகிய சொல்லினையு முடைய மடவாய் ! நாம் செல்லும் வழியை விரும்புவாய்; எ-று. (௬)

**௧எ. கல்லதர் வாயிற் கடுந்துடிகள் பம்பும்**
**வில்லுழுது வாழ்நர் குறும்புள்ளும் போவர்கொல் ?**
**எல்வளை மென்றோள் நெகிழப் பொருணசை இ**
**நல்கா துறந்த நமர்.**

ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலென்பது படச் சொல்லியது

இ - ள். கல்லையுடைய வழிமருங்கினுள்ள குறும்புகளின் வாயிற்றோறும் அச்சத்தைச் செய்யுந் துடிகள் நின்று இயம்பும் வில்லுழுது வாழ்வார் குறும்பின்கண்ணுஞ் செல்வர் கொல்லோ ? இலங்கும் வளைமென்றோள் மெலியும்படி பொருள் காதலால் நம்மை நல்காது நீங்கிய நமர்; எ-று. (எ)

**௧அ. கதிர்சுடக் கண்ணுடைந்து முத்தஞ் சொரியும்**
**வெதிர்பிணங்குஞ் சோலை வியன்கானஞ் செல்வார்க்**
**கெதிர்வன போலிதே யெல்வளையோ கொன்னே**
*** யுதிர்வன போல வுள.**

செலவுக் குறிப்பறிந்த தலைமகள் உடன்படாது சொல்லியது

இ - ள். வெயில் சுடுதலாற் கண்பிளந்து முத்தங்களைச் சொரியா நின்ற வேய் பிணங்குஞ் சோலையை யுடைய அகன்ற கானத்துஞ் செல்லக் கருதினார்க் குடன்படுவன போன்றிருந்தனவில்லை ; என்னிலங்கு வளையோ கொன்னே நிலத்தின்கட் சிந்துவன போன்றன; எ-று. (அ)

---

* 'உகள்வனபோலவுள' என்றும் பாடம்.

௪௯. கலையொடு மானிரங்கு கல்லத ரத்த
நிலையஞ்சி நீள்சுரந் தல்குவர்கொல்? தோழி!
முலையொடு சோர்கின்ற பொன்வண்ண மன்னோ
வளையொடு சோருமென் றோள்.

ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவல் என்பதுபடச் சொல்லியது

இ - ள். கலையொடு மான்கள் துன்புற்றிரங்கா நிற்கும் மலைவழிகளையுடைய கடறுகளின் இப்பெற்றிப்பட்......... நிலையஞ்சிச் சுரத்தின் கட்டங்குவர் கொல்லோ? தோழி! கலையோடு சோர்கின்றன போன்ற வண்ணங்கள் அந்தோ! வளையுடனே தளர்ந்து சோர்கின்ற என்றோள்கள்; எ-று. (௪௯)

௫௦. ஏற்றிய வில்லி னெயினர் கடுஞ்சுரம்
பாற்றினஞ் சேரப் படுநிழற் கண்டஞ்சிக்
கூற்றன வல்வில் விடலையோ டென்மகள்
ஆற்றுங்கொ லைய நடந்து.

மகட் போக்கிய நற்றாய் சொல்லியது

இ - ள். நாணேற்றிய வில்லினையுடைய வேடர் வாழும் கடுஞ்சுரத்தின்கட் பாற்றினஞ் சேரப் படுகின்ற நிழலைக் கண்டஞ்சி, என் மகள் கூற்றன்ன வல்வில்லை யுடைய விடலை யுடனே சென்றாற்ற வல்லள் கொல்லோ மெல்லிதாக நடந்து; எ-று. (௫௦)

பாலை முற்றும்.

## ௩. முல்லை

௨௧. அஞ்சனக் காயா மலரக் குருகிலை
ஒண்டொடி நல்லார் முறுவல் கவின்கொளத்
தண்கமழ் கோடல் துடுப்பீனக் காதலர்
வந்தார் திகழ்கநின் றோள்.

தலைமகன் வரைவு மலிந்தது தோழி தலைமகட்குச் சொல்லியது

இ-ள். அஞ்சனம் போலக் காயாக்கள் மலர, குருகிலைகள் ஒண்டொடியுடைய நல்லார் முறுவல்போல அழகு கொள்ள, குளிர்ந்த கோடல்கள் துடுப்புப்போலப் பூங்குலையை யீனுநிற்ப, நங்காதலர் வந்தார்; நின்னுடைய தோள்கள் விளங்குவனவாக; எ-று. (க)

௨௨. மென்முலைமே லூர்ந்த பசலைமற் றென்னுங்கொல்?
நன்னுதன் மாதராய் ஈதோ நமர்வருவர்
பன்னிற முல்லை யரும்பப் பருவஞ்செய்
தின்னிறங் கொண்டதிக் கார்.

தோழி பருவங் காட்டித் தலைமகளை வற்புறுத்தியது

இ-ள். நின்னுடைய மெல்லிய முலைமேலேறிய பசலை நிறம் என்னுங் கொல்லோ! நன்னுதலையுடைய மாதராய்! நமர் ஈதோ வருவர்; பற்போன்றிருந்த நிறத்தை யுடைய முல்லைகள்தாம் முகை யரும்பப் பருவத்தைச் செய்து கண்டார்க் கினிய நிறத்தைக் கொண்டது இக் கார்; எ-று. (உ)

௨௩. சென்றார் வருவர் செறிதொடீஇ காரிஃதோ
வெஞ்சின வேந்தர் முரசி னிடித்துராறித்
தண்கடல் நீத்தம் பருகித் தலைசிறந்
தின்றையின் நாளை மிகும்.

இதுவுமது

இ - ள். நம்மைப் பிரிந்து போயினார் வருவர். செறிதொடீஇ! இக்காலம் கார்காலமா யிருந்தது. வெஞ்சின வேந்தர் முரசுபோலிடித்து முழங்கித் தண்கடல் வெள்ளத்தைப் பருகி மேன்மேற் சிறந்து இன்றையின் நாளை மிகுங் காண்; எ-று. (௩)

௨௪. செஞ்சுணங்கின் மென்முலையாய்! சேர்பசலை தீரிஃ
வஞ்சினஞ் சொல்லி வலித்தார் வருகுறியால் [தோ
வெஞ்சினம் பொங்கி யிடித்துராறிக் கார்வானந்
தண்பெயல் கான்ற புறவு.

இதுவுமது

இ - ள். செஞ்சுணங்கினையுடைய மெல்லிய முலையாய்! நின்னைச் சேர்ந்த பசலை நீங்குவதாகச் சூளுறவாகிய சொற்களைச் சொல்லி நம்மை வற்புறுத்தினார். தாம் வருதற்குச் சொல்லிய குறியால், வெஞ்சினத்தாற் பொங்கியதுபோல இடித்து முழங்கிக் கறுத்த முகில்கள் தண்பெயலைப் புறவின் கண்ணே யுகுத்தனவாதலால், காரிது; எ-று. (௪)

௨௫. கருவியல் கார்மழை கால்கலந் தேந்த
வுருகு மடமான் பிணையோ டுகளும
உருவ முலையாய்!நங் காதல ரின்னே
வருவர் வலிக்கும் பொழுது.

இதுவுமது

இ-ள். கருவியன்ற கரிய மழை காற்றொடு கலந்துயர் தலால், முன் வெம்மையால் உருகும் மடமான்கள் தம்பிணை யோடு உகளாநின்றன. நிறத்தையுடைய முலையாய்! நங்காத லர் இப்பொழுதே வருவர். இக்காலம் நம்மைத் தேற்றுவியா நின்றது; எ-று. (ரு)

உசா. இருங்கடன் மாந்திய வேர்கொ ளெழிலி
கருங்கொடி முல்லை கவின முழங்கிப்
பெரும்பெய றூழப் பெயர்குறி செய்தார்
பொருந்த நமக்குரைத்த போழ்து.

இதுவுமது

இ-ள். பெருங்கடலைப் பருகிய அழகுகொண்ட முகில், கருங்கொடி முல்லைகள் அழகு பெறும்படி முழங்கிப் பெரும் பெயல் தாழாநிற்கப் பெயர்ந்து வருவேமென்று காதலர் குறி செய்தாராகலால், நமக்குப் பொருந்த அவருரைத்த கால மிது; எ-று. (சா)

உஎ. ஆய ரினம்பெயர்த் தாம்ப லடைதரப்
பாய முழங்கிப் படுகட லுணீர்முகந்து
மாயிரு ஞால மிருள்கூர் மருண்மாலை
சேயவர் செய்த குறி.

இதுவுமது

இ-ள். ஆயர்களினத்தை ஊரின்கண்ணே பெயர்வித்து ஆம்பற் குழலை மருவ, ஒலிக்குங் கடலுள் நீரை முகந்து பரக்க முழங்குதலான், மாயிரு ஞாலமெல்லாம் இருள் மிக்கு மயங் கும மாலைப்பொழுது நம்மைப் பிரிந்து சேயராயினார் வருவ தற்குச் சொல்லிய குறி; எ-று. (எ)

உஅ. அதிர்குர லேறோ டலைகடன் மாந்தி
முதிர்மணி நாக மனுங்க முழங்கிக்
கதிர்மறை மாலை கனைபெய லூழப்
பிதிரு முலைமேற் சுணங்கு.

பருவங் காட்டிய தோழி வற்புறுத்தியது

இ-ள். அலைகடலைப் பருகி அதிராநின்ற குரலினை யுடைய உருமேற்றோடு முதிர்ந்தமணி நாகங்கள் வருந்தும் வகை முழங்கி வெயில் மறைந்த மாலைப் பொழுது மிக்க பெயல் தாழ்தலான், இவள் முலைமேற் சுணங்குகள் பிதிர்ந் தாற்போல இனிப் பரக்கும்; எ-று. (அ)

உகூ. கோடலங் கூர்முகை கோளரா நேர்கருதக்
காடெலாங் கார்செய்து முல்லை யரும்பீன
ஆறெலா நுண்ணறல் வார வணியிழாய்!
போதராய் காண்பாம புறவு.

இதுவுமது

இ-ள். காந்தளின் மிக்க அரும்புகள் கோளராவிற்கு மாறாகக் கருதிக் காடெல்லாங் கார்ப் பருவத்தைச் செய்து முல்லை அரும்புகளை யீன, வழிகளெல்லாம் நுண்ணிய அறல் மணல் மேலொழுகுதலால், அணியிழையை யுடையாய், புறவினைக் காண்பாம் போதராய்; எ-று. (கூ)

௩௰. அருவி யதிரக் குருகிலை பூப்பத்
தெரியா வினநிரை தீம்பால் பிலிற்ற
வரிவளைத் தோளி வருவார் நமர்கொல்
பெரிய மலர்ந்ததிக் கார்.

இதுவுமது

இ - ள். மலையருவிகள் வந்து முழங்க, குருகிலைகள் பூப்ப, தெரிந்த ஆனினங்கள் இனிய பாலைப் பொழிய, வரிவளைத் தோளினை யுடையாய்! நமர் வருவார் கொல்லோ? பெரியவாயுள்ள அழகுகளை மலர்ந்தது இக்கார் ஆதலான்; எ-று. (ய)

முல்லை முற்றும்.

---

## ச. மருதம்

கக. பழனம் படிந்த படுகோட் டெருமை
கழனி வினைஞர்க் கெறிந்த பறைகேட்
டுரனழிந் தோடு மொலிபுன லூரன்
கிழமை யுடையனென் றோட்கு.

தலைமகள் வாயின் மறுத்தது

இ - ள். பழனத்தின்கட் படிந்த படுகோட்டினையுடைய எருமை கழனியின்கட் டொழில் செய்வார்க்கு எறிந்த பறை யொலியைக் கேட்டு வெருவி, அறிவழிந்தோடும் ஒலி புனலையுடைய வூரன் என்றோட் குரிமையுடையன் என்னும் இத்துணையே யமையும்; அவன் எனக்கு நல்குதல் வேண் டுவதில்லை; எ-று. (க)

கஉ. கணைக்கா னெடுமருது கான்ற நறுந்தா
திணைக்கால நீலத் திதழ்மேற் சொரியும்
பணைத்தாட் கதிர்ச்செந்நெற் பாய்வய லூரன்
இணைத்தா னெமக்குமோர் நோய்.

இதுவுமது

இ - ள். திரண்ட காலையுடைய மருதுகள் உகுத்த நறுந் தாதுகள் ஒத்த தாளினையுடைய நீலங்களின் இதழ்மேலே சொரியும் பெருந்தாட் கதிரையுடைய செந்நெற் பரந்த வய லூரன் பரத்தையர்க் கின்பத்தை இணைத்தலே யன்றி யெமக்கு மோர் பசலை நோயினை யிணைத்தான்; எ-று. (௨)

௩௩. கடையாயார் நட்பேபோற் காஞ்சிநல் லூர!
வுடைய விளநல முண்டாய் - கடையக்
கதிர்முலை யாகத்துக் கண்ணன்னார் சேரி
எதிர்நல மேன்றுநின் றாய்.

தோழி வாயின் மறுத்தது

இ - ள். கீழாயினார் நட்பே போலக் காஞ்சி மரங்களை யுடைய நல்லூரனே! என்றோழியுடைய இளநலமெல்லாம் முன்பு நுகர்ந்தாய்; பின்னை அக்கதிர் முலையாகத்துக் கண் ணனையார் சேரிக்கட் சென்று மற்றவர் இளமை எதிர் நலத்தை எதிரேற்று நின்றாய்; எ-று. (௩)

௩௪. செந்நெல் விளைவய லூரன் சிலபகற்
றன்னல மென்னலார்க் கீயா னெழுபாண!
பாரித்த வல்குற் பணைத்தோளார் சேரியுள்
வாரிக்குப் புக்குநின் றாய்.

தலைமகள் பாணர்க்கு வாயின் மறுத்தது

இ - ள். செந்நெல் விளைகின்ற வயலினையுடைய ஊரன் முன்பு சிலநாள் தன்னலத்தை யானல்லாதார்க் கீயான்; இப்பொழுது பாரித்த அல்குற் பணைத்தோளையுடைய பரத் தையர் சேரியின்கண் மற்றவர் தலைமகற்கே நல்கும் வாரிக்

குப்புக்கு நின்று ஆராய்வாயாக; ஆகையால் பாண! ஈங்கு நின்றும் எழுவாயாக; எ-று. (ச)

கரு. வேனிற் பருவத் தெதிர்மலரேற் றூதுங்
கூனிவண் டன்ன குளிர்வயல் நல்லூரன்
மாணிழை நல்லா ரிளநல முண்டவர்
மேனி யொழிய விடும்.

இதுவுமது

இ-ள். வேனிற்காலத் தெதிர்ந்த மலர்களை ஏற்றுக் கொண்டூதும் கூனிவண்டு போலுங் குளிர்வயல் நல்லூரன், ஆகலான் மாட்சிமைப்பட்ட இழையையுடைய நல்லாரின் நலத்தை நுகர்ந்து மற்றவர் உடம்பினை ஒழியவிடும்; எ-று.

கசா. செந்தா மரைமலருஞ் செய்வய னல்லூர! [டாங்
கொந்தான்மற் றுன்னைச் செயப்படுவ தென்னுண்
தந்தாயு நீயே தரவந்த நன்னலங்
கொண்டாயு நீயாயக் கால்.

தோழி வாயில் நேர்வாள் கூறியது

இ-ள். செந்தாமரைகள் மலராநின்ற செய்யப்பட்ட வயல்களையுடைய நல்லூர! நீ செய்த பிழைகட்கு நொந்தால் நின்னைச் செய்யப்படுவ தென்னுள்ளத்தாம்? என்றோழி நலத்தைத் தந்தாயு நீயே; தரவந்த நன்னலத்தைக் கொண்டாயும் நீயே யாயினால்; எ-று. (கா)

கஎ. பல்காலும் வந்து பயின்றுரையல் பாணகே
ணல்சேர் வளவய லூரன் புணர்ந்தநா
ளெல்வளைய மென்றோளே மெங்கையர் தம்போல
நல்லவரு ளாட்டயி லேம்.

பாணற்குத் தலைமகள் வாயின் மறுத்தது

இ-ள். பலபொழுதும் வந்து பயின்று சொல்லற்க, பாணனே! கேட்பாயாக; நெற்செறிந்த வளவயலூரான் எம்மைப் புணர்ந்த முன்னாளின்கண்ணும் எல்லவளையம் மென்றோளேம்; எங்கையர் தம்மைப்போல நல்ல மடந்தையருள் வைத்து அவனை யெண்ணப்பட்டிலேம்; எ-று. (எ)

கஅ. நல்வய லூரா னலமுரைத்து நீபாண !
சொல்லிற் பயின்றுரைக்க வேண்டா வொழிதிநீ
யெல்லுநன் முல்லைத்தார் சேர்ந்த விருங்கூந்தல்
சொல்லுமவர் வண்ணஞ் சோர்வு.

இதுவுமது

இ-ள். நல்ல வயலூரானுடைய நன்மை யெல்லாம் நாங்களே அறிந்து உரைக்க வல்லேம்; பாணனே! நீ சொல்லாற் பயின்றுரைக்க வேண்டா; இனி யொழிவாயாக; நிறமிக்க நன்முல்லை மாலை சேர்ந்த இருங்கூந்தலையுடைய பரத்தையே சொல்லாநின்றாள், தன்மாட்டவர் காதலித்த வண்ணத்தையும் எம்மாட்டுள்ள அவரது இகழ்ச்சியையும்; எ-று. (அ)

கக. கருங்கயத் தாங்கட் கழுமிய நீலம்
பெரும்புற வாளைப் பெடைகதூஉ மூரன்
விரும்புநாட் போலான் வியனல முண்டான்
கரும்பின்கோ தாயினேம் யாம்.

வாயில் வேண்டிச் சென்றார்க்குத் தலைமகள் வாயின் மறுத்தது

இ-ள். பெருங்கயத்த இடத்தின்கட் செறிந்த நீலங்களைப் பெரும்புறத்தினையுடைய வாளைப்பேடைகள் கதுவுகின்ற ஊரன் எம்மை விரும்பின நாட்போலான், எம்முடைய

வியனலத்தை முன்னே யுண்டான்; ஆதலான் இப்பொழுது கரும்பின் கோதுபோல வாயினேம்; எ-று. (கூ)

சய. ஆம்ப லணித்தழை யாரந் துயல்வருந்
தீம்புன லூரன் மகளிவ ளாய்ந்தநறுந்
தேமலர் நீலம் பிணையல் செறிமலர்த்
தாமரை தன்னையர் பூ.*

இந்நிலத்தின்கண் இன்ன பெற்றியால் வருவாயாகவெனச் சொல்லியது

இ-ள். ஆம்பலாற் செய்யப்பட்ட அணித்தழையும் ஆரமும் அல்குலின்கண்ணும் முலையின் கண்ணும் அசைந்து வருகின்ற தீம்புனலூரன் மகள் இவள், இவ்வூரின்கண் ஆய்ந்த நறுமலர் நீலம்; பெண்பால்கட்டுச் சூடும் பூமாலை செறிந்த மலர்த்தாமரை மாலை அவள் ஐயன்மார்க்குச் சூடும் பூவாதலால் நீயும் தாமரை மாலையைச் சூடி வருவாயாக; எ-று. (ய)

மருதம் முற்றும்

---

## நெய்தல்

சக. நெய்தற் படப்பை நிறைகழித் தண்சேர்ப்பன்
கைதைசூழ் கானலுட் கண்டநாட் போலானூர்
செய்த குறியும்பொய் யாயின வாயிழையா
யையகொ லான்றூர் தொடர்பு †

---

* நச்சினார்க்கினியர் மேற்கோள் (தொல்—களா. சூ. கககூ)

† அருமை செய்து அயர்ப்பினும் என்பதற்கு உதாரணங் காட்டுவர் நச்சினார்க்கினியர். (தொல்—களா. சூ. கககூ)

அல்லகுறிப்பட்டுப் பெயர்ந்த தோழி தலைமகன் சிறைப் புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது

இ-ள். நெய்தற் படப்பை நிறைகழித் தண்சேர்ப் பன் தாழை சூழ்ந்த கானலின்கண் நம்மைக் கண்ட முதனாள் போலானன்; அவனாற் செய்யப்பட்ட குறிகளும் பிழைத் தன. ஆயிழையாய்! அமைந்த நட்புச் செறிந்தன்றாகாதே யிருப்பது! எ-று. (க)

சஉ. முத்த மரும்பு முடத்தாண் முதுபுன்னை
தத்துந் திரைதயங்குந் தண்ணங் கடற்சேர்ப்ப!
சித்திரப் பூங்கொடி யன்னாட் கருளீயாய்
வித்தகப் பைம்பூணின் மார்பு.*

தோழி வரைவு கடாயது

இ-ள். முத்தம்போல வரும்பா நின்ற முடத்தாண் முதுபுன்னையின்கண் வந்து தத்தா நின்ற திரைகள் துளங்கா நின்ற தண்ணங்கடற் சேர்ப்பனே; எழுதிய சித்திரப்பூங் கொடி யன்னாட்கு நின்னருளினாலே நல்காய், வித்தகப் பைம்பூணையுடைய நின் மார்பினை; எ-று. (உ)

சங. எறிசுறா நீள்கட லோத முலாவ
நெறியிறாக் கொட்கு நிமிர்கழிச் சேர்ப்ப
னறிவறா வின்சொ லணியிழையாய்! நின்னிற்
செறிவறா செய்த குறி. ¶

---

* 'வேண்டாப்பிரிவினும்' என்பதற்கு உதாரணம் காட்டுவர் நச்சினார்க்கினியர். (தொல்—களா. சூ. ககசு)

¶ நச்சினார்க்கினியர் மேற்கோள். (தொல்—களா. சூ. கஉஉ)

அல்லகுறிப்பட்டுப் பெயர்ந்த தோழி தலைமகன் சிறைப் புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது

இ - ள். எறி சுறவையுடைய நீள்கடலின் கண்ணுள்ள வோதம் வந்துலாவ வரிவரியா யிருந்துள்ள மேனியை யுடைய இறுக்கள் சுழன்று திரிதருஞ் சேர்ப்ப! நின்னறிவின் கண் நீங்காதிருந்த இன்சொல் அணியிழையை யுடையாய்! நின்மனையின் புறத்து அச்சேர்ப்பன் செய்த குறிகள் பல காணுமுளவாகா நின்றன; எ-று. (௩)

சச. இனமீ னிருங்கழி யோத முலாவ
மணிநீர் பரக்குந் துறைவ தகுமோ?
குணநீர்மை குன்றாக் கொடியன்னாள் பக்க
நினைநீர்மை யில்லா வொழிவு. *

தலைமகனைக் கண்ணுற்று நின்ற தோழி வரைவு கடாயது

இ - ள். இனமீன்களையுடைய இருங்கழியின்கண்ணே வந்து ஓதங்களுலாவ நீலமணிபோன்ற நீர் பரக்குந் துறைவனே! தகுவதொன்றோ குணத்தன்மை குன்றாக் கொடியன்னாள் திறத்து நினையு நீர்மையன்றி யொழிதல் நினக்கு? எ-று. (ச)

சரு. கடல்கொழித் திட்ட கதிர்மணி முத்தம்
படமணி யல்குற் பரதர் மகளிர்
தொடலைசேர்த் தாடுந் துறைவவென் றோழி
யுடலு முறுநோ யுரைத்து.

* 'காதன் மிகுதி உளப்படக் களனும் பொழுதும் வரைநிலை விலக்கியதில் அருளவேண்டும்' என்பதற்கு உதாரணங் காட்டுவர் நச்சினார்க்கினியர். (தொல்—கள சூ. ககச)

இதுவுமது

இ - ள். கடல் கொழித்துச் சிந்திய கதிர்மணி முத்தத் தைப் படம் போன்ற அழகிய அல்குற் பரதர்மகளிர் மாலை யாகச் சேர்த்து விளையாடும் துறைவனே; என்தோழி மறுகா நிற்கும் தன்னுறு நோயை எனக்குரைத்து; எ-று. (ரு)

சசு. முருகியல் கான லகன்கரை யாங்கட்
குருகின மார்க்குங் கொடுங்கழிச் சேர்ப்ப
மருவி வரலுற வேண்டுமென் றோழி
யுருவழி யுண்ணோய் கெட.

இதுவுமது

இ - ள். நறுவிரை யுளதாகிய கானலையுடைய அகன்ற கரையின்கட் குருகினம் ஆராநின்ற கொடுங்கழிச் சேர்ப் பனே! பயின்று வருதலைச் செய்யவேண்டும் என்றோழி; மாமைநிறம் அழியாநின்ற உள்ளத்தின்கண் நோயொழிய; எ-று. (சு)

சஎ. அணிபூங் கழிக்கான லற்றைநாட் போலான்
மணியெழின் மேனி மலர்பசப் பூரத்
துணிகடற் சேர்ப்பன் றுறந்தான்கொ றோழி
தணியுமென் மென்றோள் வளை.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழியாற் சொல்லெடுப்பப் பட்டுத் தலைமகள் சொல்லியது

இ - ள். அணிந்த பூக்களையுடைய கழிக்கானலின்கட் கண்ட அற்றைநாட் போலான்; மணியெழின் மேனியின் கண் மிக்க பசப்பேறும் வகை துணிகடற் சேர்ப்பன் எம்மை மிகவே துறந்தான் கொல்லோ? என் மென்தோள்வளைகள் நீங்கா நின்றன; எ-று. (எ)

௪அ. கறங்குமணி நெடுந்தேர் கண்வா ளறுப்பப்
பிறங்கு மணன்மே லலவன் பரப்ப
வறங்கூர் கடுங்கதிர் வல்விரைந்து நீங்க
நிறங்கூறு மாலை வரும்.

தோழி தலைமகளை இரவுக்குறி நயப்பித்தது

இ-ள். ஒலிக்கு மணியையுடைய நெடுந்தேர் டார் கண்ணிநெறியை யறுப்ப, உயர்ந்த மணன்மேல் அலவன் பரப்ப, வெம்மை மிக்க கடிய வெயில் கடிதாக நீங்க, செக்கர் நிறமாக நிறமிக்க மாலைப் பொழுதின்கண் நங் காதலன் வரும்; எ-று. (அ)

௪௯. மயில்கொன் மடவாள்கொன் மாநீர்த் திரையுட்
பயில்வதோர் தெய்வங்கொல் கேளீர் குயில்பயிருங்
கன்னி யிளஞாழற் பூம்பொழி னோக்கிய
கண்ணின் வருந்துமென் னெஞ்சு.*

தலைமகன் பாங்கற்குச் சொல்லியது

இ-ள். மயிலோ? மடவாளோ? மாநீர்த் திரையின் கட் பயின்றுறைவதோர் தெய்வங் கொல்லோ? கேளீரே! குயில்கள் கூவாநின்ற கன்னியிள ஞாழற் பூம்பொழிலின்கண் அவரை நோக்கிய என்கண்ணினு மிக வருந்தாநின்ற தென் னெஞ்சு; எ-று. (௯)

௫0. பவளமு முத்தும் பளிங்கும் விரைஇப்
புகழக் கொணர்ந்து புறவடுக்கு முன்றிற்
றவழ்திரைச் சேர்ப்பன் வருவான்கொ றோழி
திகழுந் திருவமர் மார்பு. |

* நச்சினார்க்கினியர் மேற்கோள். (தொல் - களவியல், சூ: க0௩)

பகற்குறிக்கட் தலைமகன் சிறைப்புறத்தானாகத்
தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி வரைவு் கடாயது

இ-ள். பவளத்துணையும் முத்துணையும் பளிங்கினையும் கலந்து, பிறர் புகழக் கொண்டுவந்து, மனை சூழ்ந்த படைப் பையை யணைந்த முற்றத்தின்கண் வந்து வழங்குகின்ற திரையையுடைய சேர்ப்பன் விரைந்து வருவான் கொல்லோ தோழி; முன்புபோலப் பொலிவழிந்திரா நின்றது அழ கமைந்த மார்பும் பொலிவுடைத்தாய் இருந்ததாதலான் எம்பெருமான் விரைந்து வருமென்று முற்கொண்டு நமக்கு அறிவிக்கின்றதுபோலும்; எ-று. (ய)

நெய்தல் முற்றும்

---

திணைமொழி ஐம்பது
முற்றும்



P. R. RAMA IYAR AND CO., PRINTERS, MADRAS

# அருஞ்சொல்லகராதி

---

அகவுதல்—அழைத்தல்
அஞ்சனம்—மை
அடைதரல்—மருவல்
அதர்—வழி
அமை—மூங்கில்
அலர்—பழிமொழி
அலவன்—நண்டு
அல்குதல்—தங்குதல்
அறல்—கருமணல்
அனுங்கல்—வருந்தல்
ஆயர்—இடையர்
ஆர்த்தல்—ஒலித்தல்
இயை பொருள்—இயற்றும் பொருள்
ஈர்—குளிர்ச்சி
உகளல்—குதித்தோடுதல்
உடலல்—மயங்கல்
உரறல்—முழங்கல்
உரன்—அறிவு
உரு—அழகு
உரும்—இடி
ஊரன்—மருதநிலத்தலைவன்
எயிறு—பல்
எயினர்—வேடர்
எல—பெண்பால் முன்னிலை மொழி
எல்—இரவு, விளக்கம்; 'எல்லே யிலக்கம்' தொல். இடை. சூ. உ௬௧.
எழால்—புல்லூறு
எழிலி—மேகம்
ஏ—பெருமை; 'ஏ பெற்றாகும்' தொல். உரி. சூ ௩0௪.
ஏர்—அழகு
ஏறு—உருமேறு
ஏனல்—தினைப்புனம்
ஐ-வியப்பு; 'ஐவியப்பாகும்;' தொல். உரி. சூ. ௩௮௫.
ஓங்கல்—மலை
ஓதம்—அலை
கணம்—திரட்சி
கணி—சோதிடன்
கணைக்கால்—திரண்ட கால்
கடி—புதுமை
கடுவன்—ஆண்குரங்கு
கதிர்—வெயில்
கதுவுதல்—கலத்தல்
கயம்—குளம்
கருவி—தொகுதி; 'கருவி தொகுதி.' தொல். உரி. சூ. ௩௫௪.
கலை—ஆண்மான்
கல்—மலை
கழுமல்—கலத்தல்
களிறு—ஆண் யானை
கறங்கல்—ஒலித்தல்
கனை—மிகுதி
கன்னிஞாழல்—பூவெடாத கொன்றை
காய்வர்—கோபிப்பர்
கால்—காற்று

கானல்—கடற்கரைச் சோலை
கானவர்—வேடர்
கான்ற—உகுத்த
கிழமை—உரிமை
குருகு—நீர்வாழ் பறவை
குருதி—உதிரம்
குருந்து—ஒருவகை மரம்
குறும்பு—பாலைநிலத்தூர், வேடர் வாழுமிடம்.
கூற்று—எமன்
கூனி—வளைவை உடையது
கைதை—தாழை
கொட்கல்—சுழலல்
கொன்—பயனின்மைப் பொருளுணர்த்தும் இடைச் சொல்
கோடல்—காந்தள்
கோடு—கொம்பு
கௌவை—பழிமொழி
சிறை—இறகு
சிறைப்புறம்—தாமிருக்கும் இடத்தின் பக்கம்
சுணங்கு—தேமல்
செய்—கழனி
சேயவர்—அகலிடம் சென்றவர்
சேர்ப்பன்—நெய்தல் நிலத் தலைவன்
ஞாழல்—கொன்றை
தலைசிறத்தல்—மேன்மேல் மிகுதல்
துடி—உடுக்கை
துயல்வரல்—அசைதல்
தூர்த்தல்—செலுத்துதல்
தேர்தல்—ஆராய்தல்
தொடர்பு—நட்பு
தொடி—வளையல்
தொடலை—மாலை
நசை—விருப்பம்
நீத்தம்—வெள்ளம்
நீர்மை—தன்மை
படப்பை—நெய்தல நிலத்தூர்
படைத்து மொழிகிளவி—இல்லாத ஒன்றைப் புனைந்து மொழியும் சொல்
பம்பல்—ஒலித்தல்
பயிர்தல்—அழைத்தல்
பரதர்—நெய்தல் நிலமாக்கள், செம்படவர்
பழனம்—வயல்
பாங்கர்—பக்கம்
பாரித்த—பெரிய
பாறு—பருந்து
பிணங்கல்—நெருங்கல்
பிணையல்—மாலை
பிலிற்றல்—சொரிதல்
பிறங்கல்—உயர்தல்
புல்லூறு—ஒருவகைப்புள்
புறவு—முல்லைநிலம்
புலம்—பொன்
பெற்றி—தன்மை
பெற்றிய—பெரிய
மந்தி—பெண்குரங்கு
மலிதல்—மிகுதல்
மாநீர்—மிக்கநீர்
மாந்தல்—பருகல்
மாழை—அழகு
முகை—அரும்பு
முடைத்தாள்—வளைந்த அடி
முரண்—வலி
முரலல்—ஒலித்தல்
முருகு—மணம்
முழவு—மத்தளம்

முள் எயிறு—கூரிய பல்
முறி—தளிர்
முறுவல்—சிரிப்பு
யாழ்—வீணையில் ஓர் வகை
வஞ்சினம்—சூளுறவு
வரை—மலை
வரைவு—மணம்
வலந்த—சொன்ன
வறம்—வெம்மை
வாங்கல்—வளைதல்
வாரி—மிகுதி, மிக்க இன்பம்
வாள்—ஒளி
விடலை—காளை
வித்தகம்—பொன்
வியன்—அகற்சி
விரை—வாசனை
விரைதல்—கலத்தல்
விறல்—மிகுதி
வீங்கல்—பெருத்தல்
வெதிர்—மூங்கில்
வெறி—வாசனை
வெற்பன்—குறிஞ்சிநிலத்
தலைவன்

